திருக்குறள் பதிப்பக வெளியீடு நெ. 4 

# தமிழின் உயிர் நாடி

அல்லது

# படிப்பகத்திட்டம்





மேட்டூர் அணை

உயர்திரு மாணிக்கநாயகர் அவர்களால்
கீழ்க்கண்ட திருக்குறளின் திட்டப்படி கட்டப்பட்டது.

உயர்வகலம் திண்மை யருமையின் நான்கின்
அமைவர ணென்றுரைக்கும் நூல்
சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண். (குறள்)



நிலையிற் றிரியா தடங்கியான் தோற்றம்
மலையினு மாணப் பெரிது
காலத்து னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. (பக்கம் 46, 47)



பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்
னன்மை கடலிற் பெரிது
ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு (டக்கம் 46, 47)

# தமிழின் உயிர்நாடி

அல்லது

# படிப்பதெப்படி

---

இது

இராசிபுரம்
ஆர். கே. அரங்கசாமி அவர்களால்
இயற்றப்பட்டது.

விய—தை
1947 பிப்ரவரி.

திருக்குறள் பதிப்பகம், இராசிபுரம்.
(சேலம் ஜில்லா)



விலை ரூ. 1-4-0.

# முன்னுரை.

நீங்கள் இப்போது படிக்கத்தொடங்குவது ஒரு அறிவு நூல் ஆகும்.

தமிழில் உள்ள பண்டைய நூல்களின் கலைகள், எது? படிக்கும்போதே கலைகளைக் கண்டறிவது எப்படி? என்ற ஐயத்தைத் தெளிய வைக்கவே இந் நூல் தோன்றியதாகும். ஐயம் தெளிந்தால் உரிமை, துணிவு, தோன்றி அறிவு வளர்ந்து, சுதந்திரமோடு வாழலாகும். அன்புகூர்ந்து முடிவுவரைப் படித்தபின் தங்களின் எண்ணத்தைப் பதிப்பகத்திற்குக் கட்டாயம் எழுதுங்கள்.

அப்படி எழுதுவது; ஒருவகையில் நாட்டுக்குப் பயன் படுவனவாயிருக்கும்.

நீங்கள் படிப்பதோடுமட்டிலுமிருக்காமல் உங்களின் அன்பர்கள் எல்லோரையும் இந்நூலைப் படிக்கத் தூண்டுவது, அறியாமையை இந்நாட்டைவிட் டோட்டுவதாகும்.

குற்றங்களுக்கு மன்னித்து உடனே எனக்கு விளக்குவீராயின் அடுத்தப் பதிப்பில் திருத்திக்கொள்கிறேன்.

தங்களன்புக்கிணங்கிய,

**அரங்கசாமி,**

இராசீபுரம்.

# பொருளடக்கம்.

# பிழைத் திருத்தம்.

---

| பிழை | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| அதிலேய | அதிலேயே | 12 | 7 |
| தேரப் | தேறப் | ,, | 23 |
| அலேயிம் | அலேயும் | 18 | 9 |
| இவ்வலக | இவ்வுலக | 19 | 1 |
| பொாருள் | பொருள் | ,, | 2 |
| சத்தர்கள் | சித்தர்கள் | ,, | 13 |
| இருமப்ா | இருமாப் | 20 | 2 |
| புகழும் | புகும் | ,, | 15 |
| மக்கன் | மக்கள் | ,, | 23 |
| அடைக்தவர் | அடைந்தவர் | 21 | 13 |
| சூதே | இதே | 24 | 28 |
| சையை | ஓசையை | 26 | 9 |
| ஒகு | ஒரு | 34 | 5 |
| பிணியுல் | பிணியும் | 56 | 7 |
| ஆறிவுடையான் | அறிவுடையான் | 23 | 27 |

சில எழுத்துப் பிழைகளுக்காக மன்னித்து திருத்தி வாசித்துக்கொள்ளும்படியும் அடுத்தப் பதிப்பில் இக்குறைகள் நீக்கப்படுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

பதிப்பகத்தார்.

# படிப்பதெப்படி ?

இது ஒரு சரியான கேள்விதான். இக்கேள்வி கட்டாயம் கேட்கப்பட வேண்டியதேயாம், இதுபோன்ற கேள்விகட்கு பதில் கூறவேண்டியதும் சரியானதே.

கேள்வி கேட்பது எளிது ஆனல் பதில் சொல்லும்போது உணர்ச்சியுடன் கேட்டு அதன் உண்மையறிவது அரிது, கேள்வி ஒரு சொல்லில் கேட்டுவிடலாம், அதற்கு பதில் ஒரு சொல்லால் சொல்லிவிட முடியாது. அப்படி விளக்கமில்லாமல் சொல்லவும் கூடாது.

**இணருழ்த்து நாரு மலரனையர் கற்ற**
**துணர விரித்துரையா தார்** (குறள்)

தான் கற்றதை பிறர் உணரும்படி விளக்கமாக சொல்லாதவர்கள், கொத்தாக மலர்ந்தும் மணமில்லாத பூவை யொத்தவராவார்கள்.

ஆகையால் எதைச்சொன்னலும் அல்லது தெரிந்துகொண்டாலும் நன்ருக விளங்கும்படி தெரிந்துகொள்ள வேண்டும். அப்படித் தெரிந்துகொள்ள வேண்டுமானல் கேட்பவர்கள் எந்நிலையிலிருந்து கேட்கவேண்டுமெனின்

**செவிக்குண வில்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கு மீயப் படும்** (என்ற குறளின்படி)

ஒன்றைக்கேட்கும் போது பசிகூட தெரியக்கூடாது. அவ்வளவு ஊக்கமுடன் கேள்வியில் பிணைந்து செவிவாயாக நெஞ்சை களஞ்சியமாக கேட்டவை கேட்டவைவிடா துளத்தமைக்கும் முறையில் கேட்கவேண்டும்.

அப்படிக் கேட்பவர்களில் மூன்று பிரிவினர்கள் உண்டு. அதாவது, முதன்மைப்பட்டவர், இடைப்பட்டவர், கடைப்பட்டவர். எப்படியெனின்! கேட்ட, அல்லது படித்த பொருள்களை

அறிவதில், **அன்னப்**பறவை பாலில் கலந்த நீரைப் பிரித்துண்பது போல் கேட்டவைகளில் உள்ள குறைகளை நீக்கியும், பசு தனக்கு புல் மலிந்துள்ள இடத்தில் தேவையளவு விரைந்து உண்டு பின் ஓய்வுடன் அசைபோட்டு மென்று உண்பது போல், கேட்கும்போது விடாமல் இதயத்தில் சேர்த்து பின் ஓய்வுடன் அறிஞரின் உயரிய சொற்களை சிந்தித்து தம் அறிவின் திறத்தால் உள்ளதை உணருவோர் முதன்மைப்பட்டவர் ஆவார்கள்.

**மண்**ணில் எவ்விதை போடுகிறோமோ அவ்விதையின் செடியே முளைப்பது போலும், **கிளி**க்கு எதைக் கற்றுக்கொடுக்கிறோமோ அதையே சொல்லுவது போலும் தாம் படித்த அல்லது கேட்ட பொருள்களை அப்படியே கூறிக்கொண்டுள்ளவர்கள் இடைப்பட்டவர்களாவார்கள்.

**ஓட்டைக்குடம்** ஊற்றிய தண்ணீரை உடனே வெளியில் விட்டுவிடுவதுபோல கேட்டவைகளை, அல்லது படித்தவைகளை உடனே மறந்து விடுவோரும், **ஆடு**கள் தழைகள் நிறைந்திருப்பினும் அதை உண்டுகளிக்காமல் பல செடிகளை ஒன்றிரண்டாகக் கடித்துத் திரிவதுபோல் நிறைந்த அறிவால் உயர்ந்த ஆசிரியர் அருகிலிருந்தாலும் அதைவிட்டு அங்குமிங்கும் ஓடித்திரிவோரும்,

**எருமை**கள் நல்ல நீர் தெளிந்துள்ள குட்டைகளில் அப்படியே குளித்து இன்பமடையாமல் அந்நீரைக் கலக்கி சேறாக்கி அதில் குளிப்பது போல், ஆசிரியன் உள்ளத்தைக் கலக்கி பின் குழப்பத்தால் கூறும் வகைகளை கேட்போரும்,

வடிகட்டும் **பன்னாடைகள்** நல்ல நெய், தேன் முதலியதை விட்டுவிட்டு குற்றமான கசடுகளை பிடித்துக் கொள்வது போல் படித்தவைகளில் அல்லது கேட்டவைகளில் உள்ள நீதிகளை, நல்ல, வழிகளையெல்லாம் விட்டுவிட்டு குற்றமான குறைகளை மட்டிலும் பிடித்துக்கொள்ளுவோரும், கடைப்பட்டோராவார்கள் என்பதை,

அன்னம் ஆவே மண்ணொடு கிளியே
இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடை மாணுக்கர்.

என்று நன்னூல் இலக்கண விதியால் அறிகிறோம்.

இப்போது நாம் எதைக்கேட்டாலும், எந்நூல்களை படித்தாலும், எப்படி உணர்ச்சியுடன் இருக்கவேண்டுமென்பதை அறிந்து கொண்டோம்.

அப்படித் தெளிவோடு படித்தால்தான் ஒரு நூலில் கற்கப்படுவது எது? கசடுபோன்ற குற்றம் எது? குற்றங்கள் ஏன் பிறந்தது? அக்குற்றத்தை நீக்க வழி எது? குற்றங்களை பிறவாதிருக்க வழி எது? என்ற எண்ணம் பிறக்கும்.

இப்போது கேள்விக்கு பதில் கூறும்போது முழுவதையும் பொருமையுடன் கேட்கத் தெரிந்துகொண்டபடியால், படிப்பதெப்படி என்பதை முழுவதும் ஆராய்வோம்.

# தமிழின் அமைப்பு.

**நம்** தமிழ் மொழி இயற்கையமைப்புள்ள தெள்ளிய மொழி இம்மொழி முதலாவதாக அ ஈா ஓசையாகத் தோன்றி பின் குறிப்பு வடிவான எழுத்துக்களாக உருண்டு அவ்வெழுத்துக்கள் ஒன்று பல சேர்ந்து மொழியாகத்திரண்டு பல மொழிகள் ஒரு வாக்கியமாக நீண்டு இடையிடையே வினு? விடை. கார்புள்ளி, அரைப்புள்ளி; முற்றுப்புள்ளி. ஆச்சரியக்குறி! களைத்தழுவி இயற்றமிழென்ற பெயரைப் பெற்று, எதுகை, மோனை, சீர், தளை, அடி என்ற அணிகளைப்பூண்டு இருசீர் முதல் பதினறு சீர்களுக்கு மேல் வளர்ந்து இசைத் தமிழென்ற பெயரோடு நின்று இடம், பொருள், காலம் வினுதல், விடை கூறல் என்ற நடிப்பு முறையில் விளக்கும் நாடகத் தமிழாக ஓங்கி வளர்ந்து, உலகெங்கும் பல மொழி பல கலைகளாகப்

படர்ந்து, தன் இயற்கை ஒழுங்கை விளக்கும் தனி மொழிதான் தமிழ் மொழி என்பதை உள்ளத்தில் பதியவைத்தல் வேண்டும்.

## செய்யுட் கலை.

செய்யுள் என்பது கவி, பாக்கள், பாட்டுகள் என்று பொருள் படும். செய்×உள்—என்பதில், செய் என்பது, விளைவு விளை விடம் வயல் செயல். உள் என்பது உறைவிடம் நிறைந்துள்ளவை உள்ளே அடங்கியவை என்றாகும். அதை சேர்த்தால் விளைவு தங்கு மிடம், வளர்ச்சி தங்குமிடம், எதிர்கால மக்களுக்கு நாட்டு வளர்ச்சி யை பாதுகாத்து விளைவாக்கும் வயல் போன்றவை, அனுபவங்கள் நிறைந்த பண்ணை என்றெல்லாம் செய்யுள் என்ற சொல்லுக்கு பொருள் கிடைக்கிறது.

விரிந்த கருத்துக்களை சுருங்கிய முறையில் விளக்கும் தனிச் சிறப்பு வாய்ந்த திட்டமே செய்யுள் ஆகும்.

பழக்கமில்லாததால் படிக்கப்பயம் தோணலாமே தவிர அறிந் தோர்க்கு கவிகளைப்போல் எளிதாகக் கையாளும் மொழிநடைகள் வேறு ஒன்று இருக்க முடியாது. பணப்பொருள்கள் ஏராளமாக வைத்துக்கொண்டுள்ளவர்கள் அவ்வளவையும் தூக்கிக்கொண்டு சந்தைக்கு சந்தை போவதைவிட 10, 100, 1000 ரூபாய் நோட் டுகள் ஆக்கிக்கொள்வது எவ்வளவு புத்திசாலித்தனமோ அதுபோல் உலககருத்துப்பொருள்களை செய்யுளாக மாற்றிக்கொள்வது அதை விட பன்மடங்கு உயர்ந்ததேதான் என்றால் அது தப்பாகாது.

இயற்றமிழ் நடையிலே கூட ஒரு திட்டத்தை எழுத வார்த் தைகளை அடுக்காக அமைத்து எழுதவேண்டி இருக்கிறது. சொற் கள் முன்னுக்குப்பின் முரணாக இருந்தால் வாக்கியமாக பொருந்து வதில்லை. இதேபோல்தான் சட்ட நூல்களை பிறமொழியாளர்கள் திட்டமாக அடுக்கி ஒரு வடிவு செய்துள்ளனர். அவ்வடுக்கிலிருந்து ஒரு சொல்லை திருத்தவேண்டுமானால் நன்கு தெரிந்த சட்ட ஞானி

யாக இருந்தாலன்றி முடியாது. அதுபோலவே தமிழில் பண்டைய அறிஞர்கள் தங்கள் கருத்தை அடுக்க இலக்கண முறையுடன் வகுக்கப்பட்ட அளவு முறையேதான் செய்யுள் எனப்படும். ஒரு செய்யுளிலிருந்து உட்பொருளை தேர்ந்தெடுக்கத் தெரிந்துகொண்டால் மற்றபடியுள்ள எந்தத் தமிழ் நடையும் வெகு எளிதாகத் தெரியும் அப்போது பிறர் சொல்லிலிருந்து பல கருத்துக்கள் நமக்கு விளங்குவதைக்காணலாம்.

செய்யுட்களில் வரும் கருத்துக்களை அக்காலத்துள்ள அறிஞர்கள் அகவலாக, வெண்பாவாக, விருத்தமாக, பாட்டாகவும், அழுவதாக விளையாடினதாக எத்தப் பாட்டாகவும், தாலாட்டல், ஓடமோட்டல், ஆடு மேய்த்தல், குழந்தையை சீராட்டல், காதலித்தல் போன்ற நிலையில் பாடியுள்ளனர். அறிஞர்களின் உள்ளத்தில் இயற்கையாக எழுந்த ஆர்வத்தின் நிலையை அப்படியே பாடிவைத்துள்ள அனுபவங்களேதான் பாட்டுகள். அறிஞர்களின் எண்ணங்கள் முதிர்ந்து பழுத்த அறிவுப்பழங்களான செய்யுட்களை எந்நிலையில் எத்தொழிலில் இருக்கும்போது அவ்வெண்ணம் முதிர்ந்ததோ அத்தொழிலிலிருந்த வண்ணமாகவே பாடியுள்ளார்கள். அப்படிப்பாடியதை ஓலையால் எழுதிவைத்திருந்து அவற்றையெல்லாம் பொறுக்கி எவ்வெம்முறையில் வெளியிடவேண்டுமோ அப்படி வெளியிட்டதுதான் இன்றைய செய்யுள் நூல்களாகும்.

பண்டைய அறிஞர்கள் தங்களனுபவங்களை வடிக்கட்டி தெளிந்த செய்யுள் என்னும் பெட்டியில் நிரப்பியுள்ளார் என்றும் கூறலாம். ஒவ்வொரு செய்யுளென்ற பெட்டியைத் தகுதிவாய்ந்த அறிவென்னும் திறவு கோலால் திறந்துப் பார்த்தால் உள்ளிருக்கும் அனுபவப் பொருளில் அவரின் காலம், இடம், வளம், ஒழுக்கம், பொருளாதாரம், தொழில் முதலிய எல்லாம் விளங்கத்தக்கவாறு சித்திரம் வரைந்து, கலர்கள் பூசி, அச்சித்திரத்துள் அவ்வறிஞர் இருந்துகொண்டு அந்நூலைப் படிக்கும் மாணவனைப் பார்த்த கண்கொண்டு பார்த்து எல்லா நலன்களையும் விளக்கிக்கொண்டிருப்பதைப் போன்ற காட்சியைக் காணலாம். பழைய ஓலையில் உள்ள ஒரு செய்யுள் எங்காவது கிடைத்தால் அது பல ரத்தினங்

களுக்கு சமமாகும். அதில் அவ்வளவு அனுபவத்தை நிரப்பி இருப்பர்.

செய்யுளின் தன்மையை உணரும் சக்தியை இழந்த கீழ்நிலையில் உள்ள அளவுக்கு நம்மிடம் மடமை குடிகொண்டுவிட்டது அதனால்தான் செய்யுளின் கற்பனை சக்திகளைக் கற்று நாட்டை சீர் திருத்தும் ஆற்றல் நம்மிடம் வளர்வதில்லை. நம் நாட்டு பண்டைய அறிஞர்களின் அனுபவ மூட்டைகளான செய்யுட்களை அவமதித்து ஏமாந்தோம். இன்றைய கற்றவர்களும் வேடிக்கைக்காக கதை கூறி வயிறு பிழைக்கும் முறையில் செய்யுளைப் பயன்படுத்த முற் பட்டுவிட்டனர். செய்யுட்கள் அதற்காக அமைந்தவைகளல்ல, நம் நாட்டின் நிலைபேறான ஆராய்ச்சி சிற்பக்கட்டுகள், களஞ்சியங்கள் என்பதை உள்ளத்தில் வைத்து செய்யுட்களை ஆராயவேண்டும். செய்யுட் கலைகளை, பண்டைய அறிஞர் கூறிய வழிகளை, தற்போது மாற்றி தனித்தனி கலைகளாகப் பிரித்து புத்தகம் வெளியிட்டுள்ளார் கள். அதனால்தான் ஒரு கலையை கற்றோர் மற்ற கலைகளை உணரா மல் கலைகளின் அழகு குன்றி நிறைவு படாத குறை உள்ளங்களாக விளங்குகின்றனர். ஒரு புலவரோ அறிஞரோ தொண்டரோ எல் லாக்கலைகளையும் ஓரளவாவது தெரிந்து தெளிவடைந்திருக்கவேண் டும். தமிழுக்கு உரைவிடமான அகத்தியர் கருத்தமைந்த பதார்த்த குண சிந்தாமணியை எந்தப்புலவரும் பார்த்தே இருக்கமாட் டார்கள்.

மருத்துவக்கலைஞர்கள் (வைத்தியர்) தமிழ் இலக்கியமான நீதி களை பார்த்தே இருக்கமாட்டார்கள். சங்கீத கலைஞர்கள் செய்யுட் களில் வரும் பொருளை அறியுமளவுகூட இலக்கணம் தெரிந்தே இருக்கமாட்டார்கள்.

தமிழ் பண்டிதர்கள் சில புராணங்களில் வரும் சாரமான வேடிக்கைப் பாட்டுகளை பிறர் மெச்சப்பேசி விடுவதைத் தவிர மற்றவைகளை சிந்திப்பதே கிடையாது.

இப்படியாக மாறிவிட்டதால் அறிவுக்கலை பல விளையாட்டு களிலெல்லாம் காலம் கழிக்கின்றன. இனி ஓரறிஞன் எல்லாக் கலைகளின் தன்மையைத் தெரிய முற்படவேண்டுமென்றே அன்றைய செய்யுட்கள் நம் நாட்டில் தவங் கிடக்கின்றன.

நம் தாய்க்குத் தாய் பாட்டி, பாட்டிக்குப் பாட்டியான முதற் பாட்டி வரை, நம் தகப்பனுக்குத் தகப்பன் பாட்டன், பாட்டனுக்குப் பாட்டன் முதற் பாட்டனிலிருந்து நமக்கு வைத்துப்போன நம் நாட்டுச்சொத்துக்கள், செல்வங்கள், எல்லாம்; செய்யுளென்ற பெட்டியுள் வைத்துள்ள அறிவுடைய அனுபவப் பொருள் களேயாகும்.

ஆகையால் செய்யுட்களை தற்கால ஆராய்ச்சியுடன் ஆய்ந்து பொருள் கண்டும், அப்பேரறிஞர்களின் நினைவுநாள் கொண்டாடியும் சிலைகள் திறந்தும் அரசியலார் கண் காணிப்பில் செய்யுட் கலைகளை வளர்க்க வழி தேடும் முறையில் ஒவ்வொரு நூலையும் வளர்க்க வேண்டும். அக்கால அறிஞர்கள் உலகப் பொருள்களின் குணம் தெரிய பல நாள் தவங்கிடந்தும், பட்டினி கிடந்தும், காடு, மலை, குகைகளில் தங்கியும், மழை வெய்யில் காற்று விலங்கினம் முதலிய பல துன்பங்கட்கு ஆளாகியும், ஒவ்வொன்றின் தன்மையையும் தெரிய விடாப்பிடியாக தன் வாழ்நாள் முழுவதையும் அவ்வாராய்ச்சிக்கே செலவழித்து சித்தராக முனிவராக ஓயாமலிரவு பகலாய் உன்னி உன்னி சலியாத் தவத்தால் கண்ட உண்மைகளே செய்யுட் களிலுள்ள பொருள்களென்றால் ஒரு செய்யுளின் மதிப்பு என்னவாகுமென்று சிந்தித்துப்பார்த்து அதன் உட் பொருள்களை உணரும் வகையில் செய்யுட் கலைகளைப் படிக்கவேண்டும்.

## தமிழ்ச் சங்கங்கள்.

பண்டைய செய்யுட் கலைகளைத்திரட்டியது முதற்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கமென்று மூன்று சிறந்த சங்கங்களாகும் இச்சங்கங்கள் சுமார் 12,000 ஆண்டுகட்கு முந்தியதென ஆராய்ச்சியாளர் குறித்துள்ளனர்.

## முதற் சங்கம்.

இச்சங்கம் கடல்வாய்ப்பட்ட குமரிக்கண்டத்தின் கண் இருந்த தாகவும் அதை காய்சின வழுதி என்ற அரசரால் ஏற்படுத்தப்பட்டு கடுங்கோல் என்பவன் வரை 89 பேர்களால் காக்கப்பட்டு வந் துள்ளது.

அச்சங்கத்தில் தமிழை ஆராய்ந்து வந்த புலவர்கள். அகத்தியர், பரமன், முருகன், முரஞ்சியூர் முடிநாகராயன், குபேரன் முதலிய 649 புலவர்கள் ஆராய்ந்துள்ளனர். அவர்களால் இயற்றப்பட்ட நூல்கள்- அகத்தியம், பரிபாடல், முது நாரை, முது குருகு, களரியாவிரை முதலியனவாகும்.

## இடைச் சங்கம்.

குமரி கண்டம் கடல்வாய்ப்பட்ட பின் கபாட புரத்தில் வெண் டேர் செழியனால் அமைக்கப்பட்டு முடத்திரு மாறன் வரை 59 தலைவர்களால் காக்கப்பட்டு வந்துள்ளது.

இச்சங்கத்தில் கலந்து தமிழாராய்ச்சி செய்துவந்த புலவர்கள். தொல்காப்பியனார், இருந்தையூர் கருங்கோழியனார், மோசிய னார், வெள்ளூர்க் காப்பியனார் சிறுபாண்டாரங்கன், திரையன் மாற னார் துவரைக்கோன், கீரந்தை முதலாக 59 புலவர்களால் ஆராய்ச்சி நடைபெற்றுள்ளன.

இவர்களால் இயற்றிய நூல்கள்:—தொல்காப்பியம், மாபுரா ணம், இசைநுணுக்கம், பூதபுராணம், கலி, குருகு, வெண்டாளி வியாழமாலை முதலியவைகளாகும்.

## கடைச் சங்கம்.

கபாடபுரமும் கடலுக்கிரையான பின் மதுரையில் மூன்றாவது சங்கத்தை முடத்திரு மாறனால் தொடங்கச்செய்து உக்கிரப்பெரு வழுதி வரை 49 பேர்களால் காக்கப்பட்டு வந்துள்ளது.

தமிழை ஆராய்ந்தத் தமிழ்ப் புலவர்கள்:—சிறு மேதாவியார் சேந்தம்பூதனுர் அறிவுடையானுர், பெருங்குன்றூர்க்கிழார் இளந் திரு மாறன், நல்லந்துவனுர், மருதனிளநாகனுர் நக்கீரனுர் முதலாக 49 பேர்கள் ஆவார்கள்.

இவர்களியற்றிய நூல்கள் நெடுந்தொகை நானூறு, குறுந் தொகை நானூறு, நற்றிணை நானூறு, புறநானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, கலிநூற்றைம்பது, பரிபாடல் எழுபது, கூத்து, வரி, சிற்றிசை, முதலியனவாம்.

மற்றைய விரிவான விவரங்களை நக்கீரர் இறையனுரகப் பொருளில் காண்க.

## தமிழின் இலக்கண நூற்கள்.

| நூல்கள். | ஆசிரியர்கள் |
| --- | --- |
| குமரம் | குமரன் |
| அகத்தியம் | அகத்தியனுர் |
| தொல்காப்பியம் | தொல்காப்பியனுர் |
| அகப்பொருள் | இறையனுர் |
| புறப்பொருள் வெண்பா | ஐயனுரிதனுர் |
| அகப்பொருள் விளக்கம் | நாற்கவியாசநம்பி |
| யாப்பருங்கலம் | குணசாகரர் |
| யாப்பருங்கலக் காரிகை | அமிர்தசாகரனுர் |
| நேமிநாதம் | குணவீர பண்டிதர் |
| வெண்பாப்பாட்டியல் | ௸ |
| வீரசோழியம் | புத்தமித்திரர் |
| நன்னூல் | பவணந்தி முனிவர் |
| இலக்கணக்கொத்து | சுவாமிநாத தேசிகர் |
| தண்டியலங்காரம் | தண்டி |
| மாறனலங்காரம் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் |

# தமிழ் இலக்கிய நூற்கள்

## ஐம்பெருங் காப்பியங்கள்.

| | |
|---|---|
| சிந்தாமணி | திருத்தக்க தேவர் |
| சிலப்பதிகாரம் | இளங்கோவடிகள் |
| மணிமேகலை | சீத்தலைச்சாத்தனார் |
| வளையாபதி குண்டலகேசி | (அச்சில் இல்லை) |

## எட்டுத்தொகை

| | |
|---|---|
| நற்றிணை | பரிபாடல் |
| குறுந்தொகை | கலித்தொகை |
| ஐங்குறுநூறு | அகநானூறு |
| பதிற்றுப்பத்து | புறநானூறு |

## பத்துப்பாட்டு

| | |
|---|---|
| திருமுருகாற்றுப்படை | நக்கீரனார் |
| பொருநராற்றுப்படை | |
| சிறுபாணாற்றுப்படை | நத்தத்தனார். |
| பெரும்பாணாற்றுப்படை | உருத்திரங்கண்ணனார் |
| முல்லைப்பாட்டு | நப்பூதனார் |
| மதுரைக்காஞ்சி | மாங்குடி மருதனார் |
| நெடுநல் வாடை | நக்கீரனார் |
| குறிஞ்சிப்பாட்டு | கபிலர் |
| பட்டினப்பாலை | உருத்திரங்கண்ணனார் |
| மலைபடுகடாம், | பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் |

## பதினெண்கீழ் கணக்கு

| | |
|---|---|
| ஆசாரக்கோவை | பெருவாயில் முள்ளியார் |
| இனியது நாற்பது | பூதஞ்சேந்தனார் |

| | |
|---|---|
| இன்னிலை | பொய்கையார் |
| இன்னா நாற்பது | கபிலர் |
| ஏலாதி | கணிமேதையார் |
| ஐந்திணை ஐம்பது | மாறன் பொறையனார் |
| ஐந்திணை எழுபது | மூவாதியார் |
| களவழி நாற்பது | பொய்கையார் |
| கார் நாற்பது | மதுரை கண்ணனார் |
| சிறுபஞ்ச மூலம் | காரியாசான் |
| திணைமொழி | கணஞ்சேந்தனார் |
| திணைமாலை நூற்றைம்பது | கணிமேதாவியார் |
| திரிகடுகம் | நல்லாதனார் |
| திருக்குறள் | திருவள்ளுவனார் |
| நாலடியார் | சைனமுனிவர்கள் |
| நான்மணிக்கடிகை | விளம்பி நாகனார் |
| பழமொழி | முன்றுரையனார் |
| முதுமொழிக்காஞ்சி | கூடலூர் கிழார் |

முதற்சங்கம் கி. மு. 9990-ஆண்டு முதல் 5550-வரையும் இடைச்சங்கம் கி. மு. 5550 முதல் 1850 வரையும் கடைச்சங்கம் கி. மு. 1850 முதல் கி. பி. 90 வரையும் இருந்ததாக சில ஆராய்ச்சியாளர்கள் கண்டுள்ளனர்.

---

# அறிவுக்கலை.

நாம் முதலில் படிக்கத்தொடங்குவது கதையா? சரித்திரமா? நீதி நூலா? பத்திரிகையா? என்பதை தெரிந்துக்கொள்ள வேண்டும்.

கதையானல்" எந்த நீதிக்காக இக்கதை எழுதப்பட்டுள்ளது, அந்நீதிகள் நம் முதல் நூல்களில் எங்கு வந்துள்ளது, புது நீதிகள் எதாவது கண்டுபிடிக்கப்பட்டுள்ளதா? என்று ஆராயவேண்டும்

அம்மாதிரி ஏதாவது நீதியை விளக்கி இருந்தால் அது எந்த வித உணர்ச்சி ததும்ப மக்கள் உள்ளத்தை இழுக்கும் முறையில் வர்ணித்திருக்கிறதென்றும், காலம், இடம், தலைவன், தலைவி, மற்ற துணைவர்களாலும் கதை எந்நீதியில் முடிகிறதென்றும் கதையின் கருத்தறிவது மட்டிலுமாக படிக்கவேண்டும். கதைகளின் இடையில் பல வர்ணனைகளும் உதாரணங்களும் வந்திருக்கும். அதிலெல்லாம் உளமகிழலாம் ஆனால் அதிலேயே மனதை சிக்க வைத்து விடலாகாது.

சரித்திரமானால் இன்னின்ன காலத்தில், இன்னின்ன ஊர்களில், இவ்வித பெயர்களைக் கொண்ட இன்னின்னோர்கள் இருந்தார்கள், என்ற புள்ளி விவரங்களைத் தெரிவதுடன் அவ்வக்காலத்தில் நம் நாடு எவ்வளவு நாகரீகத்துடன் இருந்திருக்கின்றனவென்பதையும் அறிய வேண்டும்.

ஒவ்வொரு சரித்திரங்களைக்கொண்டே அக்காலத்தில் தபால்கள், சட்ட புத்தகங்கள், நீதி சபைகள், தண்டனைகள், கைத்தொழில்கள், கல்விப் பயிற்சிகள், அரசாங்க நிர்வாகங்கள், எப்படி நடந்துவந்துள்ளன, பொதுவாக மக்கள் எவ்வித முறையில் இன்பமடைந்து வந்துள்ளனர், என்பது போன்ற காரணங்களையெல்லாம் அறியும் நிலையில் படிக்கவேண்டும். நூல்கள் எல்லாவற்றினும் பயன் நான்கு. அவைகள் அறம் பொருள் இன்பம் வீடு. என்பதாம் இதையே,

அறம் பொருள் இன்பம் உயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேரப் படும் (குறள்)

என்பதால் அறிகிறோம்.

இல்வாழ்க்கையை முறையறிந்து நடத்துவதே அறமெனப்படும்.

உண்மையோடு உழைத்து அடைவதே பொருளெனப்படும்.

மாறுபட்ட எண்ணங்களால் மயங்காமல் தெளிவதே இன்பமெனப்படும்.

நிலையற்றனவற்றையெல்லாம் நம்பி அதனால் பற்றிய உள்ளத்தோடு வீண் கலக்கத்திற்கு ஆளாகாமல் விடுதலையடைவதே வீடு எனப்படும்,

அதாவது. தானும் துன்புறாமல் பிறரையும் துன்புறுத்தாமல் வாழும் வழி, அறவழி.

உடல் முதலாக உலகப்பொருள்களின் குணத்தன்மையைத் தெரிந்து செயலாற்றும் வழி, பொருள் வழி. இவ்விரண்டிலும் முறை மாறாமல் ஒழுக்கங்காப்பது இன்பவழி. அவ்வின்பம் இடையறாது நிலைத்து நிற்பது மெஞ்ஞான வீட்டு வழி. இவ்வித நிலைகளை நன்கு தெரிந்து படிக்கவேண்டும்

ஒரு புத்தகத்தை படிக்கும்போது முதலாவதாக ஒரு முறை முழுவதையும் படித்துவிடவேண்டும். படிக்கும்போது எந்தெந்த நீதிகள் எங்கெங்கு வந்துள்ளது என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்வதோடு முடித்துவிடவேண்டும்.

மறுமுறை படிக்கு முன் புத்தகத்தில் வந்த முக்கிய குறிகளை சிறிது நேரம் சிந்திக்கவேண்டும்.

பின் படிக்கும்போது ஒவ்வொரு சொல்லிலும் பொருள், கருவி, காலம் வினை இடம் ஆகிய ஐந்தின் நிலையையும் உணரவேண்டும்.

**பொருள் கருவி காலம் வினையிடனோ டைந்து**
**மிருடீர வெண்ணிச் செயல் (குறள்)**

ஒரு நூல் எம்முறையைத் தலைமையாகக் கொண்டுள்ளதோ அம் முறைக்குப் பொருள் எனப்பெயர்.

பக்தி நூலுக்குப் பக்தியே பொருள்.
அப்பக்தியை நடத்தும் பொருளெல்லாம் கருவி.
பக்திக்குரிய நேரமே காலம்,

பக்தியை அடைவதே செயல்.

அப்பக்திக்குரிய இடமே இடமாம்.

சட்ட நூலானால்-சட்டமாகிய பொருளை துணைவரான கருவிகளால் எக்காலத்தில் எம்முறையில் எவ்விடத்தில் செய்து வெற்றியடைதல் வேண்டும் என்பதை ஊன்றியறிவதும். வியாபார நூலானால்; உலகப் பொருள் என்ற வினை பொருளை, பணம் என்ற கருவிகொண்டு, எக்காலத்தில் வாங்கி எவ்விடத்தில் விற்கவேண்டுமென்று பகுத்துச்சொல்லும் வழிகளை உணர்வது. இதேமாதிரி எல்லா நூல்களின் நிலையை உணர்ந்துப் படிக்கவேண்டும்.

இதிலும் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு பயனையும் சிந்தித்துக்கொண்டே போகவேண்டும்.

அரசியல் நூல்களைப் படிக்கும்போது இந்த ஆறு அங்கமும் அரசாங்கத்தில் பொருந்தி உள்ளனவா என உணரவேண்டும்.

> படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறு
> முடையா னரசருள் ஏறு (அதாவது)

> படை—கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
> ஆற்ற லதுவே படை

> குடி—நகையீகை இன்சொல் இகழாமை நான்கும்
> வகையென்ப வாய்மை குடிக்கு

> கூழ்—கூழுங் குடியு மொருங் கிழக்குங் கோல்கோடிச்
> சூழாது செய்யு மரசு

> அமைச்சு-வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
> டைந்துடன் மாண்ட தமைச்சு

> நட்பு—இனையர் இவரெமக் கின்னம்யா மென்று
> புனையினும் புல்லென்னும் நட்பு

> அரண்-மணிநீரு மண்ணு மலையும் அணிநிழற்
> காடு முடைய தரண் (குறள்கள்)

தகுதிமிக்க படைகளும், அறிவிற் சிறந்த குடிகளும், குறைவற்ற சோறும், அரசியலை நிர்வகிக்கும் மந்திரிகளும், மக்களின் நிலையை உணரும் அறிஞர்களான ஆலோசனையாளர்களின் நட்பும், இவ்வமைப்பு மாறுதபடி காக்கும் அரண்களான பாது காவல்களும், பொருந்தி அரசாங்கம் நடக்கிறதா ? என்று சிந்தித்து படிக்கவேண்டும்.

அறிவியல் நூல்களைப் பற்றிப் படிக்கும்போது எடுத்ததற்கெல்லாம் அறிவு அறிவு என்று எழுதியிருப்பதை அப்படியே படித்து விடுவதல்ல, அறிவின் சக்தியைத் தெரிந்துக் கொள்வதற்கு அறிவுக்குத் துணையான குணங்களைத் தெரிந்துக்கொள்ள வேண்டும்.

மனம், புத்தி, சித்தம் அகங்காரம் அறிவு என்ற ஐந்தையும் அதன் தன்மையையும் நன்கு ஆராய வேண்டும்.

ஒளிக்காக விளக்கையும், மணத்திற்காக பூக்களையும், நாம் காப்பதுபோல் அறிவுக்காகவே இவ்வுடலை காக்கிறோம். ஒளியை அடைய விரும்பாதவன் விளக்கைப் பாதுகாக்கமாட்டான். அப்படி பாதுகாத்து வந்தாலும் ஒளியை அடையாத ஒன்றால் அவனை கயவன் என்றே கூறுவார்கள். பசிக்கென்று தேடிய உணவை பசி வந்தபோது பயன் படுத்தாமல் உணவை பாதுகாத்துக் கொண்டே இருந்தால் அவன் அறியாமையுடையானுகக் கூறுவோமல்லவா ? அதேபோல் அறிவை அடையப் பாதுகாக்கும் உடலை பாதுகாத்துக்கொண்டே வந்து அறிவை இன்னதென்றே உணாமல் இருந்து ஒளிதராத விளக்குமாதிரி உடலை மாத்திரம் வளர்த்து வந்தால் உடலால் அடைந்த பயன்தான் யாது? ஒரு செடி பூ பழம் தருகிறது. மரம் பூ பழம் கொடுத்து தானும் விறகு சட்டம் விட்டமாக உதவுகிறது. இவ்வுடல் எதைக்கொடுக்கிறது ? குழந்தைப் பருவத்தைக் கொடுத்தது. வாலிபத்தைக் கொடுத்தது. யௌவனத்தைக்கொடுத்தது. கிழப்பருவத்தைக் கொடுத்தது. இறப்பையும் கொடுத்தது. இடையிடையே நோய்களையும் கொடுத்தது. கொடுத்த பருவங்கள் எதைக்கொடுத்தது? பூ எது? பழம் எது? நமது

உழைப்பால் வளர்த்த உடலின் பயன் எது? அப்பயன் எங்கே? இவ்வுடலை வளர்க்க எவ்வளவு பொருள்கள் செலவு, அதைத்தேட எவ்வளவு நேரம் செலவு, இவ்வளவு பொருள்களுக்கு ஈடு எது? என்று தெளியவேண்டுமானால் நம்மிடம் உள்ள குணங்களை நாம் நன்கு ஆராயவேண்டும்.

எங்கெந்த சரக்கை சட்டியில் போட்டு காய்ச்சுகிறோமோ அந்த குணம் மணம் தானே அக்குழம்பில் அமையும், அதேபோல் எந்த குணம் நம்முள் தங்கி ஊறுகிறதோ, அதன் குணம் மணம்தானே நம்மிடம் வீசும். ஆகையால் குணங்களைப்பற்றிய ஆராய்ச்சி ஒவ்வொருவருக்கும் முக்கியத்துவமாகிறது.

இப்போது குணங்கள் ஐந்தும் எவ்வித குணத்தை உட்கொண்டிருக்கின்றன என்று பார்ப்போம்.

இவ்வைந்து குணங்களும் இவ்வுலகப் பொருள்கள் ஒவ்வொன்றினிடத்தும் தங்கியே உள்ளன. ஆனால் வேலை செய்வது அவரவர்களின் (அது அதுகளின்) சேர்க்கை வழியேயாகும்,

எந்த குணம் வேலை செய்கிறதோ அம்மாதிரியான குணத்தாரோடு பழகப்பழக அக்குணம் அளவுக்கு மேல் வளர்கிறது. அக்குணத்தின் பலனை 'பெயரை' அக்குணம் தங்கிய உடல் தாங்குகிறது. சூது தங்கினால் சூதன். திருடு தங்கினால் திருடன். நல்ல எண்ணம் தங்கினால் நல்லவன். அறிவுதங்கினால் அறிஞன், நிர்வாகம் தங்கினால் தலைவன்.

இப்படியே குணங்கள் உயர்ந்தும், தாழ்ந்தும், வேலை செய்தும், சும்மாவே இருந்தும், காலம் கழிக்கின்றன.

சில குணங்கள் எப்போதும் தோன்றாமலே கூட சும்மா இருந்துவிடுகின்றன.

குணங்களை வேலை வாங்கும் சக்தி, பூர்ண அதிகாரம் அறிவுக்குத்தான் உண்டு. ஆத்மா, அறிவு, இவைகளின் ஆராய்ச்சி

இல்லாதவர்கள் குணங்களை வேலை வாங்கும் சக்தியை அடையாத வர்கள் ஆகிறார்கள்.

ஆகையால் குணங்களை ஆராய்வோம்.

## மனம்

மனம். மனித நிலையிலே நின்று தான் எண்ணிய வழி யெல்லாம் சென்று, உடலோடு ஒன்றுபட்டு விளங்கும் தன் மையில் உடலே நான்! நானே உடல், என்ற தடிப்புத்தன்மை யுடன், ஓர் பொருளின் வடிவாகத் தன்னை நினைத்து, தனக்குத் தேவையான பொருள் வடிவங்களைத் தேடி தனது கை, கால், தலை முதலிய உறுப்புகளாலேயே எச்செயலையும் செய்து பாடுபடும் நிலை மனதின் நிலையாகும். (மனத்தளவு நிற்பவன் மனிதன், மனதை உடையவன் மனுசன்) மனதின் நிலையுடையவன் தன் உடலையே சுமந்து இங்கும் அங்கும் ஓடியாடி, செயல் புரியச்சலிடாமல் பாடு படுவான். இப்படிப்பட்டநிலைகளைப் படிக்கும்போது மனிதத்தன்மை இது என்பதை உணர்ந்துப் படிக்கவேண்டும்.

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற (குறள்)

## புத்தி

இதற்கு மேல் புத்தி நிலை.

புத்தி நிலை மனதிற்கு மேல் கொஞ்சம் உயர்ந்தது. புத்திசாலி, மதியுடையோன் என்றும், இந்நிலையைப் புகழ்ந்து கூறுவார்கள். புத்திசாலி, ஒரு செயலை திடீரென்று செய்யத் தலைப்படமாட்டான் யோசனித்து இறங்கிவிட்டால் இடையிலும் நிறுத்தமாட்டான்.

யோசனையில் நேரங்கழிப்பது புத்திசாலிக்கு நல்லதாகவே தோன்றும் (மனதுத் தன்மையுடையோனுக்கு ஆலோசனையில் நேரங்கழிப்பது வீண் செயலாகத் தோன்றும்)

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை—என்றபடி

புத்திசாலித்தனத்தோடு நூல்களின் அறிவும் பொருந்திவிடுமானால் அந்த சிறப்புக்கு ஈடு வேறு எதுவும் கிடையாது.

மனம்:—கண்டபடி எதையும் செய்து அதனால் துன்பம் தேடிக்கொள்ளும்.

புத்தி:—ஆலோசியாமல் எதையும் செய்ய விடாது.

மனம்:—எதிரிட்ட எல்லாவற்றையும் அடைய ஆசை கொண்டு அலையும்

புத்தி:—பிறர் குறை கூற இடந்தராது.

மனம்:—உடலால் சுமக்கும் செயலையே செய்யும்.

புத்தி:—தந்திரத்தால் கருவிகளைக்கொண்டே செயலாற்ற முற்படும்.

மனம்,—நீண்டநாளைக்குரிய மாதிரி எண்ணாது.

புத்தி:—எதிர்காலத்தைக் கருதி நீண்டு ஆலோசிக்கும்.

இம்மாதிரி வரும் செயல்களில் புத்திசாலி யார்? மனதை யுடையவர் யார்? என்பதை அறிந்துப் படிக்கவேண்டும்.

## சித்தம்

சிந்தனை—புத்திக்கு மேல் சித்தம் அதாவது சிந்தனை உயர்ந்தது புத்தியானது நல்லதென்று தேர்ந்தெடுத்ததையெல்லாம் சிந்தனை பகுத்துப்பகுத்து நினைத்துக்கொண்டே இருந்து அதை அடையும் வரை மறவாமல் தவங்கிடக்கும்.

சிந்தனைசக்தியானது இவ்வுலக நிகழ்ச்சியில் காணும் இயற்கைப் பொருள்கள், செயற்கைப்பொருள்கள் எவையெவை? என்றும், மண்ணின் குணம், நீரின் குணம், நெருப்பின் குணம், காற்றின், குணம், ஆகாயத்தின் குணம் இவ்வைந்தும் சேர்ந்து இவ்வுலகத்தை நடத்தும் சக்தியின் செயல்களையும், மக்கள் வாழ்க்கையின் மாறுதல்களையும், எண்ணி எண்ணி ஊன்றி சிந்தித்தும்; சிந்தனைக்கே எட்டாததை தெரிந்தோரிடம் கேட்டுத்தெளியுமளவு மறவாமல் நினைத்துக்கொண்டே இருந்து தக்காரைத் தேடி அறிந்துகொள்ளும்.

சலிப்பில்லாமல் நினைந்து நினைந்து ஓர் முடிவுக்கு வருவதே சித்தத்திற்கு பெருமகிழ்ச்சி.

இச்சித்தத்தை மாசு படாமல் வைக்கத்தெரிந்தோர்களைத்தான் நம் நூல்களில் சித்தர்கள் என்று கூறுவர்.

இச்சித்தர்கள்! நுட்பமான அணுமயமாக நின்று, நுழைந்து ஒன்றை உணர்வதால் ஒரு மாதத்தை, வருடத்தை, ஒரு கணமாகக் கழிக்கவும். ஒரு கணத்தை வருடமாக நீட்டவும் இடம் தருகிறது.

இந்நிலையை உணர்ந்தவர்களுக்கு அரிய செயலை எளிதாக முடிக்கவும், எளிதான செயலை அரிதிலுமரிதாக்கவும் முடியும்.

இன்றைய இயந்திர ஆட்டமெல்லாம் சிந்தனையின் ஆற்றலென்றே உணரலாம். அதோடு சித்தசக்தியுடையோர்க்கு மலையும் பந்தாகும், கடலும் கையிலடங்கும் என்பது பழமொழி. இந்நிலைகளை உணர்ந்து சித்த சக்தியை உணர்ச்சியுடன் அடையப் படிக்க வேண்டும்.

## சினம் (துணிவு)

அகங்காரம்—சித்தத்தை பெரிதெனக் கண்டவர்கள் சித்தத்தால் சிந்தித்து பல செயல்களையும் செய்வதால், அவரின் செயல்கள் சித்தித்து (வெற்றியடைந்து) பலன் கொடுப்பதால், அங்கு ஓர் குணம் எழுகிறது. அக்குணம் மற்றவர்களை மதியாத அகங்காரம்

ஆகும். இவ்வகங்காரத்தை அகந்தை, வெகுளி, பொறாமை, சினம் எனவும் கூறுவர். இக்குணம் யான், எனது என்று இருமப்பா படைந்து பொய், பகை, பிளவு முதலிய குணங்களை உதவியாகக் கொண்டு ஆட்தலைப்பட்டு விடும். அப்படி ஆகும்போது உத்தமச் செயல்களான அறம், பொருள், இன்பம், என்ற நல்வழிகளில் நடந்து மனோ சக்தி, மதி சக்தி, சிந்தனைசக்தி களை உதவியாகக் கொண்டு நடுநிலை மாறாமல் நடந்தால் அவ்வகங்காரம் வீரத்தன்மை பெற்று நாட்டு மக்களுக்கு உதவி செய்து தலைமைப்பட்டத்தையும் ஏற்று உரிமையுடையோனாக வாழச்செய்யும். அப்படியின்றி யாரை யும் மதியாமல் பிறரை துன்புறுத்தும் தீய வழிகளில் சென்று கோபம், பொறாமை, பொய், முதலிய குணங்களை உதவியாக வைத் துக்கொண்டு யான் எனது எனும் செறுக்கால் நடுநிலைமை மாறி தனித்து நின்றால் அது தாழ்வையே கொடுக்கும்.

யான் எனதெனும் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகழும்—என்றும்
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்—என்றும்

கூறியவாற்றால் அறிகிறோம்.

இப்போது அகங்காரம். நல்ல குணங்களோடு நட்புகொண்டு பேரறிஞர்களின் கூட்டுறவோடு வாழ்ந்தால் உயர்ந்த நிலையையும்,

தாழ்வான குணங்களோடு உள்ளவர்களை நட்புகொண்டு அந் நிலையில் தோன்றும் அகங்காரம் தாழ்ந்தும் இருக்கும்.

மக்கள் உயர்வதில் இந்நிலை முக்கிய சந்திப்பாகும். மனதை வென்று புத்தியைத்தாண்டி சிந்தனைக்கு மேல் சென்று அகங்கார நெருப்பாற்றில் எவ்வளவோ பேர்கள் அழிந்துள்ளனர். அறிஞர் ஆவதில் இந்நிலை ஓர் பெரும் கண்டம் என்று சொல்லலாம்.

இப்போது அகங்காரம்; உயர்ந்த குணத்தோடு பழகினால் தலைமையாய சிறப்பும், தாழ்ந்த குணத்தினோடு பழகிய, வீண் சினத் தால், கனம் சிதைந்து, சீரழிந்து வாழவேண்டி வரும். என்பதை அறிந்தோம்.

# அறிவு

அறிவு—மேற்கண்ட குணங்களின் நிலைகளில் தவறாமல் உயர்த்திக்கொண்டே வந்தால், எல்லா குணங்களின் சத்துக்களெல்லாம் திரண்ட அறிவு நிலையை அடையலாம்.

அறிவு என்ற சொல்லின் பொருள்; அறிவது, விளங்கிக் கொள்வது, எல்லாவற்றின் உட்கருத்தை ஐயமறத் தெரிவது, மூக்காலமும் உணர்வது, என்ற பொருளில் அடங்கும்.

அறிவு, இயற்கை, ஆத்மா, உயிர், சத்து, காரணம், என்பதெல்லாம் ஒரு பொருள்தான் என்பாரும் உண்டு.

அறிவு நிலையை அடைந்தவர்கள் உயர்ந்த நிலையை அடைந்தவராவார்கள்.

அறிவு நிலைதான் பேரின்பம், வீடு, கைலாயம், வைகுண்டம் மோட்சம் என்றெல்லாம் கூறப்படுவதாகும். அவ்வறிவு நிலையை அடைந்தவர்கள்தான் விண்ணவர், வானவர் முனிவர், ரிசிகள், தேவர்கள், அரன் அயன் அரி எனப்படுவோர்கள் ஆவார்கள்.

முருகன், வள்ளுவன், புத்தன், ஏசு, மகமது, காந்தி, பெரியார் போன்றோர்களும் அறிவு நிலையை அடைந்தவர்களே ஆவார்கள்.

உயர்ந்த மலையின் மேல் ஏறிப் போகப்போக கீழே உள்ளவைகள் எவ்வளவு எளிதாக விளங்குகிறதோ. அதே போல் உயர்ந்த அறிவுநிலையை அடைந்தவர்கள், எல்லாவற்றையும் எளிதாக உணரும் சக்தியை அடைகிறார்கள்.

இயற்கையில் நிகழும் செயல்களைக்கொண்டு, உள்ளதை உணரும் சக்தி அறிவுக்குண்டு.

ஆகாயத்தின் சக்தியைக்கொண்டு காது கேட்கப்படுவதில் அறியும் அறிவு ஒன்று

காற்றின் சக்தியைக்கொண்டு தோல் உணர்ச்சியால் அறியும் அறிவு ஒன்று.

நெருப்பின் சக்தியைக்கொண்டு கண் பார்த்து அறியும் அறிவு ஒன்று.

நீரின் சக்தியைக்கொண்டு நாக்கு சுவைத்து அறியும் அறிவு ஒன்று.

மண்ணின் சக்தியைக் கொண்டு மூக்கு மோப்பத்தால் அறியும் அறிவு ஒன்று—

இவ்வைந்து அறிவும் பொருந்தினவைகள்தான் ஐந்தறிவுடை யது எனப்படும்,

மிருகங்கள் பறவைகள் முதலிய மாக்களும் பகுத்தறிவற்ற மக்களும் ஐந்தறிவினதாகவே நூல்கள் கூறிவரும்.

> விலங்கொடு மக்கள் அனையர் இலங்கு நூல்
> கற்றாரோ டேனையவர்—என்றபடி.

இவ்வைந்தறிவும் கூட எல்லா உயிர்களிடத்தும் நிறைந்திராமல், ஓரறிவுப்பிராணிகள், இரண்டறிவுப்பிராணிகள், மூன்றறிவுப்பிராணிகள், நான்கறிவுப்பிராணிகள், என்பவைகளும் உண்டு. மக்களிலே கூட ஓரறிவு ஈரறிவு மூவறிவு நாலறிவு இப்படி குறைவுபட்டவர்களும் உண்டு. அவைகளை அவரவர் செயல்களை உணர்ந்து தெரிந்துக்கொள்ளவேண்டும்

இப்படியாக உள்ள எல்லா சக்திகளையும், எல்லா குணங்களையும், உணர்வதன் நிலையே அறிவு எனப்படும்.

> மனோ சக்தி—தன் உடல், தன் குடும்பத்தளவு நிறையும்.
> மதி சக்தி—தனக்கு எதிரிட்ட எதையும் ஆலோசிக்கும்.
> சிந்தனை சக்தி—நல்லதென்று கேள்விப்பட்டதையும் அடையத் தவங்கிடக்கும்.

அகங்கார சக்தி—தானென எழுந்து நடத்திக் காட்டும்.

அறிவு சக்தி—நிறைமதி போன்ற உளங்கனிந்த அன்பு நிலையும் சூரிய ஒளி போன்ற சமத்துவ நிறைவும், பெற்று எல்லா குணங்களுக்கும் தலைமை வகிக்கும்.

உடலுக்குள் அமைந்த குணங்களின் அரசியல் நிர்வாகங்களை நடத்தி, வாழ்க்கை என்னும் ஆட்சியை திறம்பட நடத்தவும், பொது மக்களின் இன்பத்தை பாதுகாக்க நாட்டு அரசியலாட்சியை ஏற்று ஒழுங்குபட நடத்தி வெற்றி காணவும், அறிவால்தான் முடியும்.

மனோ சக்தியுடையவர்களுக்கு ஆட்சியில் ஓர் பங்கு கிடைத்தால் தனக்கென்றே பொருளை தேடுவர்

மதி சக்தியுடையவர்களுக்கு அரசியல் அங்கம் கிடைத்தால் தன்னோடு சேர்ந்தவர் உலாக்கும் இன்பந்தேடு முறையில் ஆட்சி நடைபெறும்.

சிந்தனா சக்தியுடையவர்களுக்கு ஆட்சி கிடைத்தால் நாடு புதுப் புது செயல்களை நிகழ்த்தி சிறப்புற செயல்கள் நடைபெறும்.

அகங்கார சக்தியுடையவர்களுக்கு ஆட்சி கிடைத்தால் பிளவு சச்சரவு, சண்டை, பகை முதலியவைகளோடு நிர்வாகம் நடைபெறும். (நல்லன சேரில் நல்லனவாகவும் மிதந்து நிகழும்) அறிவுடையவர்களுக்கு ஆட்சி கிடைத்தால் எல்லோரையும் தானாகவே நினைத்து எல்லாவற்றையும் தன்னதாகவேக்கருதி, ஒவ்வொருவர் எண்ணத்தையுமறிந்து எல்லோரையுமொன்றுபட நோக்கி தாராள சிந்தையுடன் எல்லோரும் இன்புற்று வாழும் முடிவை நடத்தி ஆட்சியை வளர்க்கும் முறையில் நடத்துவார்.

அறிவுடையார் ஆவதறிவார் அறிவிலார்
அஃதறி கல்லாதவர்—என்றபடியும்
அறிவுடையார் எல்லாமுடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்

என்பனபோன்ற அறிவு நிலையையும் உணர்ந்துப் படிக்கவேண்டும்.

# மொழிக் கலை.

ஓசை எழுத்தாகி, எழுத்துக்கள் தனித்து நின்றும், அன்றி பல சேர்ந்தும் ஓர் சொல்லாகி ஒரு பொருளை உணர்த்தி நிற்கிறது. ஓரெழுத்தொரு மொழிகள் ஆ. ஈ. ஐ. ஓ. கா. கு. கை. கோ. சா. சீ. சே. சை. சோ. தா. தூ. தை. பூ. பை. போ. மா. மீ. மை. யா. வா. வை. முதலிய ஓரே எழுத்துக்கள் ஒவ்வொரு பொருளைக்கொடுக்கின்றன. ஈரெழுத்து மூவெழுத்து நான்கெழுத்து இப்படிப்படவும் சொற்கள் அமைந்துள்ளன. இப்படியாக உள்ள சொற்களின் வகையில் ஆற்றலுள்ள சொற்கள், நுட்பமுள்ள சொற்கள், கடின சொற்கள், விகாரச் சொற்கள், அன்புள்ள சொற்கள், பகை சொற்கள், நட்புச் சொற்கள், ஞான சொற்கள், இப்படியாக பல சொற்கள் நிறைந்துள்ளன.

இச்சொற்களை அவ்வித நிகழ்ச்சி நடைபெறும் காலத்திலோ, அந்நிகழ்ச்சியை கூறும் நூல்களில் அவ்வவ்விடத்திலோ கண்டுணரும் தன்மையோடு படிக்கவேண்டும்.

உலகம் என்ற சொல்லையும் வீடு என்ற சொல்லையும் ஒரே மாதிரி படிப்பது போல் பொருள் கொள்ளக்கூடாது. வீடு பல சேர்ந்தது ஊர், ஊர் பல சேர்ந்தது தேசம், தேசம் பல சேர்ந்தது நாடு, பல நாடுகள் சேர்ந்தது கண்டம், பல கண்டங்கள் சேர்ந்தது உலகம், இவ்வளவு பெரிய உலகம் என்ற சொல்லை பொருளறிந்து நம் நாக்கு சொல்லும்போது அச்சொல் மிக பளுவாகவே இருக்கும். பேசுதல் சொல்லுதல் கூறுதல் மொழிதல் என்பவைகளின் பொருள் ஒன்றாகவே இருந்தாலும் ஆற்றல் முறையில் மிக வேறுபாடுண்டு. பேசுதல் சாதாரணம், சொல்லுவது எளிது, விளங்கப்பகுத்துப் பிரித்துக்கூறாக்கி விளக்கிக் கூறுவது கடினம். மொழிவது, உண்மையை உள்ளபடியறிந்து முழுவது முணர மொழிதலாகும்—அதாவது, வாயளவு பேசுதல். நெஞ்சத்தளவு சொல்லுதல் சிந்தனை, புத்தியளவு, கூறுதல். உள்ளத்தளவு அறிவால் மொழிதல். இதேமாதிரி தமிழில் ஒரு பொருளுக்குப் பல பெயர்கள்

வந்தால் அவைகள் பெரும்பாலும் காரணப் பெயர்களாகவே இருக்கக் காணலாம்.

சொற்களை நன்கு ஆழ்ந்து சிந்தித்தால் அல்லது அறிஞரோடு கலந்தால் சொற்களின் உட்பொருள்கள் நன்கு விளங்கும். அப்படிப் பட்ட தன்மையையும், வலிமையையும், பொருட்பொலிவையும் உணர்ச்சியுடன் தெரிந்துப்படிக்கவேண்டும்.

எவ்வெச்சொற்கள் எவ்வித உணர்ச்சியை எழுப்பவல்லது என்பதை தெரிந்துகொண்டவர்களே மக்களுள்ளத்தை மாற்றவல்ல ஆசிரியர்கள் ஆவார்கள்.

சொற்களின் உட்புலனை உணர்ந்தவர்களே புலவர்கள் ஆவார்கள்.

ஒவ்வொருவரின் எண்ணத்தை உணர்ந்து அவைகளிலுள்ள குற்றத்தை நீக்கி நல்ல சொற்களின் கொள்கையான ஒழுக்க மென்னும் வித்துக்களை நாட்டுவோனே வித்துவான் (விதைப்பவன்) எனப்படுவார்கள்.

## சொற்களின் எடைகள்

எழுத்துக்களையோ சொற்களையோ பேசுவதில் எடைகளு முண்டு.

முகத்தலளவை, எண்ணலளவை, நிறுத்தலளவை. என மூன்று வகைப்படும்,

## முகத்தலளவை

தண்ணீர் மாதிரி உள்ளவைகளை ஓர் பாத்திரத்தில் மொண்டு முகத்தலளவையால் அளக்கிறோம். அதேமாதிரி ஓசை வடிவான உயிர் எழுத்து நீர் மாதிரி நிகழ்வதால் அதை மெய்யாகிய பாத்திரத் தில் நிரப்பி எடை போடுகிறோம். அதாவது அ. முதல் ஔ. வரை

யுள்ள டனிரெண்டு வகை ஓசைகளும் உயிரெழுத்துக்களாகும். அவைகளை நிறுத்தி ஒலிக்க முற்றுப்புள்ளிக்கு உயிர் இடம் தராமல் அ என்ற ஓசை நீண்டு வந்து கொண்டே இருக்கும். ஒரு மணி நேரம் கூட 'அ' என்றே ஒலிக்கலாம், அப்படி அ என்று ஒரே இசையுடன் இழுத்துக்கொண்டிருக்காமல் அச்சத்தத்தை நிறுத்தும் போது கண்டத்தில் ஓர் தடையை உற்பத்தி செய்து தடுக்கிறோம். அத்தடையான ஓர் வடிவமே மெய்யாயிற்று.

ஓசை வடிவாயுள்ளது உயிர் எழுத்து.

ஓசையைத்தடுத்து நிற்பது மெய்யெழுத்து. கண்டமாகிய தொளையில் வரும் உயிரான ஓசையை தடுக்கும் குண்டுதான் மெய் (அதாவது மெய், உடல், சடம், சடப்) இதைக்காட்டவே மெய் வடிவுக்குத் தலையில் குண்டு வடிவம் கொடுத்து அடக்கியிருப்பதால் அறியலாம்.

வடமொழிகளில் கூட ஒரு குண்டை அம் என்றும்: இரண்டு குண்டுகளை அஹ: என்றும் கூறுவதால் அறிகிறோம்.

தமிழ் பிறந்த அமைப்புதான் ஆங்கிலத்திலும் அமைந்துள்ளன தமிழில்-அ ஆ. எ. ஏ. வுக்கு A. என்ற சத்தமும். இ. ஈ. வுக்கு E. சத்தமும். உ. ஊ. வுக்கு U. சத்தமும் ஐ-க்கு I சத்தமும்.. ஒ. ஓ. வுக்கு O. சத்தமும். இவ்வைந்து எழுத்தும் உயிரெழுத்தென்றும் மற்ற எழுத்துக்கள் யாவும் உயிரெழுத்தில்லாமல் ஒலிக்காத மெய்யெழுத்தாகவும் அமைந்துள்ளன.

இதனால் ஓசை வடிவான உயிரை நிறுத்திய முடிவே (தடுக்கும் அடைப்பே) மெய்யாகிறது. என்பதால் உயிரிலேயே மெய் அடங்கி உள்ளதென்ற உண்மையை மொழியில் அடக்கியிருப்பதையும், உடலான மொழியும் உயிரான அறிவும் ஒன்றுபட்டிருப்பதையும் அறிகிறோம். இவ்வுணர்ச்சியை கல்லாதவர்களே கல்வி கல்லாதவர்கள் என்று நூல்கள் கூறுகின்றன என்பதையும் தெரிந்துப்படிக்கவேண்டும்.

உயிர் எழுத்து கட்டுக்கடங்காத ஓசை வடிவானதென்றும், மெய்யெழுத்து பண்ட வடிவமான மெய்யாகிறதென்றும் முடிவதால் உயிர் எழுத்தை மெய்பான பாத்திரத்தில் மொண்டு எடை போடுகிறோம். அப்போது குறில் 1, மாத்திரை, நெடில் 2. மாத்திரை. அளபெடுத்தால் 3, 4 மாத்திரை, இரக்கம் அச்சம். முதலிய போது 10. மாத்திரைக்கு மேலும் உயிரெழுத்து நீர் மாதிரி நீளும்.

உடலு முயிருமா முப்பது முதலே (நன்னூல்)

அதாவது உடலெழுத்தாகிய மெய்யெழுத்து (க் முதல் ன் வரை 18-ம் உயிரெழுத்தாகிய (அ முதல் ஔ வரை) 12-ம் ஆக முப்பது எழுத்துக்களும் முதலெழுத்தென்பதாலும்.

உடல்மேல் உயிர்வந்தொன்றுவ தியல்பே.

ஒரு சொல்லின் கடைசியில் மெய் எழுத்து வந்து, தொடரும் சொல்லின் முன் உயிரெழுத்து இருந்தால் இரண்டும் ஒன்றாக கூடிவிடும்.

"அவன் எங்கே—அவனெங்கே" எனவாகும்.

என்பதை விளக்குவதாலேயே-உடலாகிய தடித்த நம் உடலும் உயிராகிய நம் ஆவியும் ஒன்றுபட்டு விளங்குவதையும் விளக்குவதறிக.

## எண்ணல்லளவை

இது ஒன்று, இரண்டு என்று எண்ணத் தகுதியுள்ளதாக இருப்பன.

ஒரு பொருளைக்குறிக்கும் சொல்லை ஒருமை என்றும், பல பொருள்களைக் குறிக்கும் சொற்களை பன்மை என்றும் இலக்கண நூல்கள் கூறும்.

ஒருமைப் பெயர் சொல். மனிதன், மாடு, கல், மரம்.

பன்மைப் பெயர் சொற்கள். மனிதர்கள், மரங்கள், கற்கள், விலங்குகள். போல்வன.

ஒருமை வினைச்சொற்கள், சாப்பிட்டான். வளர்ந்தது. உடைந்தது. தின்றது.

பன்மை வினைச்சொற்கள், சாப்பிட்டார்கள், வளர்ந்தன, உடைந்தன, தின்றன.

இதில் ஒன்று பல என்பதின் வேறுபாடுகளை எண்ணினோம்.

இடம் மூன்று.

தன்மை, முன்னிலை, படர்க்கை. அதாவது தன்னை மட்டிலும் குறிக்கும் சொல் தன்மை. எதிரிட்டவரை குறிக்கும் சொல் முன்னிலை. மூன்றாவது மனிதரை குறிக்கும் சொல் படர்க்கை.

தன்மை—நான், யான், தன், என்.

முன்னிலை—நீ, உன், உமது, உங்கள்.

படர்க்கை — அவன், அவள், அவைகள்.

என்பதில் வந்துள்ள சொற்களோடு வார்த்தைகள் சேர்ந்தால் மூன்று இடம் பிரிவது விளங்கும்.

நாம் தனியே நம்மைப்பற்றி சிந்திப்பது தன்மை. எதிரில் ஒருவர் வந்தபோது அவர் நமக்கு முன்னிலை, மூன்றாவதாக ஒருவர் வந்தாலும் ஒருவரைப்பற்றி பேசினாலும் படர்க்கை.

இப்படிப் பார்க்கும் போது ஒவ்வொன்றையும் எண்ணிப் பார்த்து கண்டு பிடிக்கிறோம். எண்ணுதல் என்பதை நினைப்பது என்று புலர் கருதினாலும், ஒன்று பல என்று எண்ணுதல் என்பதே சாலப்பொருத்தமுடையதாக ஆகிறது.

இதனால் எழுத்தையும் சொல்லையும் பொருளையும் உட்கருத்துக்களையும் எண்ணுதல் என்பதே எண்ணலளவை என்பதும். அரசரும் வந்தார் என்பதில் வந்துள்ள உம்மை, மற்றும் பலரும் வந்தார் என்ற எண்ணின் உம்மையை உள்ளடக்கியிருப்பதையுமறிக.

இதனால் எதிரிட்ட உலகப்பொருள்களின் பெயரை, அறிவால், எண்ணி எண்ணியும் (நினைத்து நினைத்து அறிந்தும்) ஒன்று, பல,

என எண்ணி எண்ணியும் எண்ணத்தின் அளவை உணரும் முறையில் உணர்ந்துப்படிக்கவேண்டும்,

## நிறுத்தலளவை

இதை எடுத்தலளவை என்றும் கூறுவர். அதாவது எண்ண முடியாதபடி சிறிதும் பெரிதுமான பொருள்களை எடை போடுதல் போல், சொல்களில் உள்ள பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச் சொல் உரிச்சொல் முதலிய வகைகளையும், ஓரெழுத்து ஈரெழுத்து மூவெழுத்து அதற்கு மேற்பட்ட எழுத்துக்களால் ஆகிய சிறிதும் பெரிதுமான சொற்களையும், அறிவு நிறை கோலால் எடை போட வேண்டும். பல சொற்களைக் கலந்து பாக்களில் எடை போடுதலாலேயே பாக்களுக்கு தூக்கு என்றும் ஒரு பெயர் உண்டு.

ஒரு சொல்லை ஒரு தட்டில் வைத்து அளவு காண்பதற்கு மற்றொரு தட்டில் வைக்கும் படிக்கல்லுகள் என்ன தெரியுமா? பகுதி, விகுதி, இடை நிலை, சந்தி, சாரியை, விகாரம். ஆகிய ஆறும் ஆம். இவை வினைச்சொற்களில் நிறைந்தும் குறைந்தும் வரும்.

சொல்லுகளை எடைபோட இந்த ஆறு வழிகளையும் கட்டாயம் தெரிந்தேதான் ஆகவேண்டும்.

ஒரு சொல்லைப் பிரித்து இவைகளைக்காணலாம்
படித்தனன். (இது ஒரு வினைச்சொல்)
படி × த் × த் × அன் × அன்
படி — பகுதி
த் — இறந்தகால இடை நிலை
த் — சந்தி
அன் — சாரியை
அன் — விகுதி — இது போலவும்

கரும்பு சோலை - என்பது கருப்பஞ்சோலை என விகாரப்பட்டு வரும். இப்படி எடை போடும்போதுதான் இறந்தகாலம், நிகழ்

காலம் எதிர்காலம் என்ற மூக்காலமும், உயர்திணை அஃறிணை, ஆண்பால் பெண்பால் பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்ற திணை வகையெல்லாம் விளங்கும்.

இனி பல சொற்களை எடை போடத் தெரிதல் வேண்டும். அதற்கு வீசை மணங்கு பாரம் போன்ற எடை கல்லுகள் வேண்டுமே அவைகள், எழுவாய் பயனிலை செயப்படுபொருள் ஆகிய மூன்று வழிகளாகும்.

அவைகளை ஒரு வாக்கியத்தில் காணலாம்.

அவன் புத்தகத்தைப் படித்தான்

| | |
|---|---|
| அவன் | எழுவாய் |
| புத்தகத்தை | செயப்படுபொருள் |
| படித்தான் | பயனிலை |

ஒரு வாக்கியத்தின் தலைவர்-எழுவாய், முடிவு-பயனிலை, இடையில் நடந்ததெல்லாம் செயப்படுபொருள்.

இப்படியே பல வாக்கியங்களையும் உணரலாம் இப்படிப்பட்ட பல வாக்கியங்கள் சேர்ந்தால் கதை, சரித்திரம், கட்டுரை, நூல், ஆகிறது,

ஒரு நூலிலும் இம் மூன்றையும் அறியலாம். ஓர் வீரன் பட்டத்தை வெறுத்து பல நாடு சென்று போரிவைத் தேடி அநேக சுயநலமிகளை வென்று நகரடைந்தான். இதில்வீரன் எழுவாய், அடைந்தான் பயனிலை, இடையில் நடந்தவைகளெல்லாம் செயப்படுபொருள். இப்படியாக உள்ள தமிழ் நடை, தமிழ் வகை, தமிழ் தொகைகளின் முறைகளை நன்கு தெரிந்துகொள்ளும்படிப் படிக்க வேண்டும்.

இவ்விலக்கண முறைகளை திருக்குறளில் கல்வி, கல்லாமை, சொல்வன்மை, இனியவை கூறல், கேள்வி, பயனிலசொல்

லாமை, அவையறிதல், அவையஞ்சாமை ஆகிய அதிகாரங்களால் விளக்கியும்

இடை தெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடை தெரிந்த நன்மையவர்

அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில்

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்

என்ற குறள்களால் சொல்லின் நடைகளையும் சொல்லின் வகைகளையும் சொல்லின் தொகைகளையும் சுருங்கக்கூறி விளங்க வைத்தும் உள்ளதை நன்கு படித்துணரவேண்டும்.

## அன்புக்கலை

அன்பு என்பது ஒவ்வொரு நூலிலும் நிறைய வந்துகொண்டே இருக்கும். அன்பு என்பதற்கு பொதுப் பொருளாக உரை எழுதுவோர்கள் இரக்கமாக நடப்பது என்று மாத்திரம் எழுதிவிடுவார்கள்.

அன்பு அப்படி ஒரு பொருளை மாத்திரம் உட்கொண்டனவாக இல்லை. பல இன்ப வழிகளையெல்லாம் உட்கொண்ட ஒரு சொல்லாக அமைந்துள்ளது. மற்றைய மொழிகளுக்குத் தமிழ் எப்படி சிறந்ததோ அப்படி தமிழுக்கு அன்பு சிறந்தது. அன்பின் இயைவால் உலகம் தோன்றி அன்பின் மறைவால் உலகம் அழியுமென்றும். வளர்ச்சிப் பொருள் நிறைந்தத் தன்மைக்கு அன்பு என்றும், தளர்ச்சிப் பொருள் நிறைந்தத் தன்மைக்குத்துன்பு என்றும் பொருள் காண்பதே சாலப் பொருந்தும் இதனை

அன்பின் வழிய துயிர் நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு

அதாவது அன்பின் வழியாகத்தான் உயிர்கள் தோன்றின, உயிர் நிலைக்கு முதற்காரணம் அன்பின் வழியேயாகும் மற்றைய வெல்லாம் உயிரற்ற எலும்பும் தோலும் போன்ற உடல் சடம் கட்டைமாதிரிதான் என்பதால் அன்பின் சக்தி விளங்குகிறது.

இப்பெரும் அன்பின்சக்தி உயிராக மாறி உடலுக்குள் இணைந்து இவ்வுலகத்தை கண்டவுடன் தனக்கு முந்திய இனத்தவர்களின் வழக்க பழக்க அழுக்கால் மறைந்து அன்பு என்பதே எது என்று கூட புலனாகாமல் மாறி, அன்பு மயமான உயிர்களோடு உயிர்கள் பகை, பொறாமை பிளவு முதலிய மாறுதல்களை மேற்கொண்டு துக்கம் துன்பம் இவைகளை ஏற்றுக்கொண்டு (இன்பம் அடையவந்த மக்களின் வாழ்க்கை) மாக்களிலும் கீழாக உழைத்து அலுத்து அழியும் நிலையைக் கண்டு தம் உயிரின் இயல்பான அன்பு குணத்தைப் பாடமாகப் படித்து உணரவேண்டிய நிலை ஏற்பட்டது.

உயிர் சந்துள்ள அன்பு மக்களுக்கு உதவிசெய்ய முயலும்போது இரக்கங்காட்டுவது என்ற ஒன்றால் மாத்திரம்தான் முடியும் என்பதல்ல, பிறர் வாழ்க்கையை உயர்த்தும் எண்ணமுடன் ஒருவருக்கு செய்யும் செயலெல்லாம் அன்பினால் செய்ததே யாகும்.

தனக்கென்ற எண்ணம் வைத்து பிறரிடம் நயந்துஅன்புபோல் பேசுவது அன்பாகமாட்டாது. பிறரை காக்கும் முறையில் செய்யும் எவ்வித துன்பம் போன்றவைகளும் அன்பாகவே முடிகிறது. எப்படியெனில்

குழந்தையைப் படிப்பிக்க, மருந்தூட்ட, அடிக்கிறோம். நோயை தீர்க்க சிலந்தி கட்டிகள் முதலியதை அறுத்தலாகிய துன்பம் செய்கின்றனர். புத்தி வருவதற்காக கண்டித்தும் மிரட்டியும் பேசுகின்றார்கள். உணராதாரை அடித்தும் விளங்க வைக்கிறார்கள். இவைகள் தொடக்கத்தில் துன்பமாகத் தெரிந்தாலும் பின் நீடித்த இன்பத்தில் வாழ்வித்தலால் அவைகள் அன்பால் காத்ததேயாகிறது. இதனை துன்ப முறவரினும் செய்க துணிவாற்றி இன்பம் பயக்கும் வினை

என்பதால் பிறரை இன்பப்படுத்த சிறு துன்பத்திற்காக அஞ்சவேண்டியதில்லை என விளங்குகிறது. சில சமயங்களில் அன்பின் வேகம் சண்டையாகக்கூட மாறுகிறது. நாட்டு மக்களின் மேல் கொண்ட அன்பால், மக்களைத் துன்புறுத்தும் தீச்செயல்மேல் போராட நேருகிறது. அப்போராட்டத்தின் முடிவு இன்பத்தைக் கொடுத்தாலும் ஆரம்பம் துன்பத்தைக் கொடுத்தே தீருகிறது. இந்நிலையைத்தான்

அன்பிலா ரெல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு

என்பதால் நன்கு விளங்குகின்றன

இதுவரை அன்பின் நிலை எத்தனையோ வகையில் பிறஉயிர்கள் வளர உதவி செய்யும் இன்பத்தை உட்கொண்டிருக்கின்றன என்பதை ஆராய்ந்தோம் இனி உணவில் அன்பைக் காட்டுவதெப்படி என்பதை ஆராய்வோம்.

## அன்புணவு.

பல நாட்டு நூல்கள் பலவிதமாக உணவை வகுத்திருக்கின்றன அப்படி வகுத்ததில் அந்தந்த நாட்டின் சூடு சீதளம்வாயு நிலையை அறிந்தும், எளிதில் கிடைப்பனவுமான உணவுகளையும், அன்பை அறிந்தோ அறியாமலோ உண்டுவந்துள்ளனர். இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு உயிருள்ள பொருள்களும் ஒன்றை உண்டேதான் வளரவேண்டி இருக்கிறது. அப்படி உண்ணும் உணவில்தான் அவ்வந் நாட்டு அறிவு நிலையும், குணமும், பலனும் அடங்கியுள்ளது. விலங்கு பறவை முதலான சகல உயிரிடத்தும் உணவின் தன்மையால் குணம் வேறுபட்ட அன்பு நிலையை நேரில் காணலாம்.

உணவில் இரண்டுவகை உணவு உள்ளன. ஒன்று, ஒன்றை அழித்து உண்பன. மற்றொன்று பங்குபெற்று உண்பன. அழித்துண்பதானது ஒருயிரைகொன்று அதன் உடலை உண்பது,

பங்கு பெருவதானது உயிருக்கு துன்பமில்லாமல் அவ்வுடலுக்கான உணவைக்கொடுத்து நமக்கான உணவை பங்கு பெறுவது அதாவது [எரு நீர் முதலியவைகளை கொடுத்து] கீரை வகைகள் பூ வகைகள் கிழங்கு வகைகள் காய், பழம், விதை வகைகளை பெறுவது. இவைகளை அடைய ஒரு உயிருள்ள மரத்தையோ செடியையோ வெட்டி உயிர் மாய்த்து அடையவேண்டியதில்லை. ஆடு, பசு, எருமைகளிடம் பால் தயிர் நெய் இவைகளை பங்காகப்பெற்று பதிலாக சிலவகை உணவை அவைகளுக்குக் கொடுக்கிறார்கள். இவைகள் பங்கு பெறும் உணவுகள் ஆகும்.

இவ்வுணவு முறையிலும் அன்பு கலந்துள்ளன. (பசு, யானை முதலான) இலைபுல் முதலியவைகளை உண்ணும் விலங்கினங்களின் எருவை உண்டு செடி கொடி மரங்கள் வளர்கின்றன. இலையை விலங்குகள் உண்கின்றன. எருவை தாவரங்கள் உண்கின்றன. புலி சிங்கம் நரி ஓநாய்கள் ஒன்றை அழித்துத் தின்கின்றன. அப்படித்தின்று வளர்ந்து மற்றெதற்கும் பயன்படாமல் சோரமாய் தனித்திருந்தே அழிகின்றன. இவற்றையெல்லாமறிந்தே நம் நாட்டு பண்டைய அறிஞர்கள். பங்கு பெறும் உணவை கைக்கொண்டு அழித்துண்ணும் உணவை நீக்கி வந்துள்ளனர்.

வெளிநாட்டார் பலரும் குளிர் நாட்டிற்கொத்த உணவான அழித்துண்ணும் தன்மையராதலால் அவரால் ஒருக்கால் நம் நாட்டு பங்குணவு கெட்டுவிடாதபடி ஒவ்வொரு நூலாசிரியரும் கொல்லாமை புலான் மறுத்தல் அன்புடைமையை நிலைப்படுத்தி கூறியிருக்கின்றனர்.

பகுத்துண்டு பல்லுயிரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாம் தலை—என்பதால்

எல்லா உயிருக்கும் ஒவ்வொருவரும் தம்மாலானதை பங்கிட்டுக் கொடுத்து தமக்கு வேண்டியதை வாங்கிகொள்ள வேண்டும் என்ற இம்முறை எல்லா நூலாசிரியர்களும் ஒப்புக்கொண்ட உயர்ந்த முறை என்று வள்ளுவர் திடம்படக் கூறியிருக்கிறார்.

நம் நாடு அன்புக்கு எவ்வளவு வழிகாட்டி என்பதும் மக்களோடு மக்கள் ஒன்றுபட்டு வாழுவதுமட்டிலுமல்லாமல் எல்லா உயிர்களையும் மரியாதையுடன் நடத்தி அவைகளை தன் தோழனுக ஒன்றுபடுத்தி வாழத்தெரிந்திருந்தார் என்பதையும், இவ்வொற்றுமையை உணர மற்றைய நாட்டார்களுக்கு இனி பலகாலம் ஆகுமென்றும், ஆனால் நாமும் இடையில் மறந்து மதியிழந்து வாழும் நிலையை உடனே நீக்கி, தூக்கமயக்கம் நீங்கி திடீரென விழித்ததே போல், ஆட்டுமந்தையிலிருந்தே பழகிய சிங்கம் நீரில் தன்முகத்தைக் கண்டதும் திடீரென கிழம்பியதேபோல், நம் நிலையை உணர்ந்த அறிவு, திடீரென பரந்த பேறறிவாக விளங்கி, அன்பு நிலையை உணர்ந்து ஒன்றுபட்டு வாழும் தன்மையை உணரும்படிப்படிக்க வேண்டும்

தாவர உணவு—உடலையும் அறிவையும் வளர்க்கிறது

ஊனுணவு—உடலை தடிக்கச் செய்து அறிவை மந்தப்படுத்துகிறது

தாவர உணவு—அன்பு, சாந்தம், உள்ளது

ஊனுணவு—கோபம், மூர்க்கம், உடையது

தாவர உணவு—நல்மணம், நல்சுவை, இயல்பாக உடையது

ஊனுணவு—துற்மணம், வெறுப்புச்சுவை, உடையது

தாவர உணவு—இயற்கையாக உண்டு களிக்கத்தக்கது

ஊனுணவு—செயற்கையாக்கியல்லது உண்ணமுடியாதது

தாவர உணவு—ஒன்றின் உதவின்றி சுவை தருவது

ஊனுணவு—பல பொருளின் உதவியின்றி உண்ண முடியாதது இவ்வளவையுங் கருதியே முக்காலத்தும் எந்நாட்டவரும் போற்றி ஏற்கும் தாவர உணவுப் பங்கீட்டு முறையை உயர்த்தி பல நாட்டவருக்கும் விளக்கி வந்துள்ளனர்,

தாவரத்தின் பங்கை உண்டு வளர்ந்த உடலையும் உயிர் பிரிந்த வுடன் பல மரங்களடர்ந்த சோலையினுள் புதைத்து மரங்களுக்கு எருவாகவே கொடுத்துவிடுவர். அல்லது உடலை சுட்டு சாம்ப லாக்கி நீரில் கரைத்து செடிகளுக்கு எருவாக்கிவிடுவர்.

இப்படியெல்லாம் உள்ள அன்பு நிலையை மக்கள் வாழ்க்கையில் உணராமல் உயிருள்ள நடைபிணமாக உண்டு உறங்குவதிலேயே வாழ்நாள் கழிக்காமல்

அன்பு மறனு முடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது

என்றபடி இன்பவாழ்க்கையாக இனிது வாழும் நிலையில் அன்புக் கலைகளைப்படிக்கவேண்டும். படித்தபடியும் நடக்கவேண்டும்.

**அன்பின் வீரம் அழியாதது.**

இப்படி அன்போடு நடந்து எல்லோரையும் பிணைத்து வாழ்ந் தால் நம் நாட்டை பிறர் அடிமைப்படுத்த முற்படும்போது நமக்கு வீரம் துணிவு எப்படி வரும் எனிலோ அதற்கு அன்புடைமை வகுத்த இயற்கை வள்ளுவத்திட்டம் படை மாட்சி, படை செருக்கு, என்ற வழி வகுத்துள்ளது. அன்புடன் கலவாத சினம் கனம் சிதைக்கும். அன்புடன் கலந்த அறிஞர்களின் வெகுளியை எதிர்த்து யாரும் கண நேரமும் காத்தலரிது.

குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது
ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி எனப்படு வார்—என்றபடியான

அழியா வீரத்தை அன்பு கொடுக்கும் என்பது புலனாகிறது.

அன்பில் தவழும் தாய்நாடே நம் நாடு
அன்பின் அடிப்படையே நமது மதம்

அன்பை அணியாகப் பூண்ட புத்தமதம் பல
அரசரை தன்னகத்தே கொண்டு வளர்கிறது

அன்பை தன் நடத்தையால் காட்டிய கிரிஸ்து மதம்
பல நல்லாரசை தன்னகத்தே கொண்டு வாழ்கிறது

அன்பை மக்கள் பால் நடத்திக் காட்டிய மகமதுநபி மதம்
பல அரசை தன்னகத்தேகொண்டுள்ளது.

பொதுவாக அன்பு எத்தனையோ பெயரால், எத்தனையோ வேடத்தால், எத்தனையோ மதப் பிரிவால் வேறு வேறானதாக வளர்ந்தாலும் முடிவாக அன்பின் பெயரால் அழைக்கும்போது எல்லோரும் ஒன்றுபட்ட உயிரின் வடிவாக, கூடி வாழும் தன்மையை உடையராகவே முடியும்.

அன்பின் முடிவை நாடி ஓடிவரும் எல்லா மதப்படைகளும் வழிக்குத்தக்கவாறு உடை, சடை, முடி, அணி, மணிகளைப் போர்த்து வந்தாலும் முடிவில் நின்று மேற்போர்வை நீக்கிப் பார்த்தால் யாவரும் அன்பர்கள், எல்லோரும் அன்பர்களே! என்று கூடி வாழும் தன்மையை அறிந்து கொள்ளும் முறையின் முடிவைச் சிந்தித்துப் படிக்க வேண்டும்.

# மருத்துவக்கலை.

உற்றவன் தீர்ப்பான்மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து—(குறள்)

மருத்துவம் என்பது மருந்து உண்போன், மருந்துகொடுப்போன், மருந்து, உதவி செய்வோன், ஆகிய எல்லாவற்றிற்கும் மருந்து என்றே பொருளாம்.

உடலில் தோன்றும் நோய்களைத் தீர்க்க வழி செய்யும் உதவிகளுக்கு மருத்துவம் என்று பொருளாகிறது.

உடலுக்கு முதல் நோய் பசியாகும் அப்பசி நோய்க்கு மருந்தாக உணவை உண்ணுகிறோம். நாம் உண்ணும் பலவித உணவுகளால் பசி நோய் தணிவதோடுசில குணங்கள் அதிகப்படுகின்றன. அக் குணங்கள் வாயு பித்தம் சீதளம் என்ற மூன்றாகப் பிரிகின்றன. அரிசி, பருப்பு, கிழங்கு போன்ற உணவுகள் பசியையும் தணித்து வாயுவை அதிகப்படுத்துகின்றன. அதற்காக அவ்வுணவுடன் வாயுவை கண்டிக்கும் மருந்துகளை சேர்க்கிறோம். இப்படியே உணவுக் குத்தக்க குணமறிந்து உணவால் நோயுண்டாகாதபடி உணவுப் பொருளுக்கும் மருந்து கொடுக்கிறோம். சாப்பாடு என்ற உண வுக்கு; குழம்பு, ரசம் என்பதெல்லாம் மருந்து சாக்குகளை சேர்த்த (கசாயம்) நீர் கலந்தே உண்ணவேண்டும் என்பதே பொருளாம். அம்மருந்து சாக்குகள் உப்பு, மிளகாய், புளி, கடுகு சீரகம், மிளகு, சுக்கு, பூண்டு, பெருங்காயம் போன்றவைகள் ஆகும். அதோடு பல மூலிகைகளையும் (கீரைகள்) சேர்த்துக்கொள்ளுகிறோம். இவ்வள வும் உணவால் உண்டாகும் நோயைத் தணிப்பதற்கேயாம்.

பழக்கத்தால் நாம் இவைகளை உண்டு உண்டு ஓர் சுவையாக்கிக் கொண்டோமே தவிர சுவைக்காக இவைகளை சேர்க்கப்பட்டதல்ல

வாய்வு அதிகரித்தால் முருங்கை, முடக்கத்தான், இலைகளை இரசம் வைக்கிறார்கள்.

பித்தம் அதிகரித்தால் இஞ்சி, வேப்பம் பூ, துவயல் செய்கிறார் கள்.

சீதளம் அதிகரித்தால் தூதுவளை சிறு கீரையை இரசம் வைக் கிறார்கள். இவைகளை பழக்கமில்லாதவர்கள் மருந்து மாதிரி உண் ணுகிறார்கள். பழகினவர்கள் இடையிடையே மகிழ்ந்து உணவாக உண்ணுகிறார்கள்.

பல காலங்களுக்கு முன் அத்திக்கள் ஈச்சங்கள் தென்னங் கள்ளை வெட்டை நோய்க்கு உட்கொள்ள கொடுத்தபோது மருந்தாக வெறுக்கும் நிலையில் குடித்தார்கள். இப்போது அப்பழக்கம் விட முடியாமல் சட்டத்தால் தடுக்கப்படுகிறது. (கள்ளால் மயக்க வெறி

உள்ளதால் அறிஞர் ஆரம்பத்திலிருந்தே நூல்களில் கண்டித்து வந்துள்ளனர்).

இருமல் நோய்க்கு ஊமத்தம் பூவையும் புகை இலையையும் எருக்கிலையில் சுருட்டி மருந்தாக புகை பிடிக்கச்செய்தார்கள். அக்காலத்தில் அப்புகை இழுக்க வெறுப்பாக இருந்தது. அம்மருந்தான புகையிலை இன்றைக்கு, விட முடியாத பயித்தியத்தை உண்டாக்கி விட்டது. இப்படிப் பார்த்தால் மக்கள் பயன்படுத்தும் எல்லாப் பொருளும் மருந்தாகவே உள்ளன என்று உணரலாம். கீழேபடுத்தால் சிறு கற்களால் நோயுண்டாவதால், அந்நோய்க்கு மருந்தாக கட்டில் பாய் தலையணை மெத்தை ஆகியவற்றைப் பயன்படுத்திக் கொள்கிறோம்.

பல்லில் அழுக்கு சேர்ந்து நோய் உண்டாகிறது. அந்நோய்க்கு மருந்தாக ஆல் வேல்களால் பல்லை சுத்தப்படுத்துகிறோம்.

தலையில் அழுக்கு சேர்ந்து மயிர்க்கால்கள் மூடப்பட்டு நீர் தங்கி தலைபாரம் தலை நோய் அழுக்குப்புண் போன்ற நோய்கள் வாராதபடி எள்ளின் நெய்யை தேய்த்து இலுப்பை, சீயக்காய், அரப்பு போன்ற மருந்தால் சுத்தப்படுத்துகிறோம்.

துணிகளில் அழுக்கு சேர்ந்து அவ்வழுக்குத் துணியால் தோலைப்பற்றிய சொறி, சிறங்கு, படைபோன்ற நோய்கள் வாராதபடி வெந்நீரால் ஊரவைத்துத் துவைக்கிறோம்.

கீழே நடப்பதால் நச்சு கலந்த கற்கள் குத்துமென்றும், எச்சில் மூத்திரம்போன்ற அசுத்தத்தால் தொத்து நோய்கள் உடலைப் பற்றுமென்றும் செருப்பு மருந்தை காலுக்கு உபயோகிக்கிறோம்.

மழை காலம், காற்று காலம், பனி காலம், வெய்யில் காலங்களிலெல்லாம் உடல் நிலை நோயால் கெடாதபடி ஒரே நிலையமைந்து வாழ வீட்டை மருந்தாக பயன்படுத்துகிறோம்.

இப்படிப் பார்க்கும் போது மனிதன் வாழ்க்கையெல்லாம் மருந்தாகவே முடிகிறது.

அதாவது உடல் நிலைக்கு நோய் வாராதபடி, நோயுண்டாகாத படி தடுக்கும், அனைத்தும் மருந்தே ஆகும்

அது மாத்திரமா சொல்லிலும் நோயும் அதற்கு மருந்தும் உண்டு.

சொற்களை இன்பமாகப் பேசினால் உடலுக்கு இன்பமும் அதைக்கேட்கும் பிறராலும் இன்பமே கிடைக்கிறது. அதைவிட்டு துடுக்காகவும், எடுப்பாகவும், பிறரை இழிவாகவும் பேசினால், அப் பேச்சு பிறர் மனதை நோயாக்கி அந்நோய் நம்மேல் படர ஆரம்பிக் கிறது.

பிறர் மனம் புண்பட பேசிய பேச்சால் உண்டான பகை பிளவு என்னும் நோய் முதிர முதிர சண்டை, சச்சரவு, அடி, உதை யாகவும் அளவுக்கு மீறினால் உயிர் போம் அளவுள்ள நோயாகவும், மாறி விடுகின்றது. அப்படிப்பட்ட நோய்களுக்கு மருந்தும் சொல் லேதான். தீய சொற்களால் வரும் நோய்களை நல்ல சொற்களால் தீர்க்கும் வழிகளை அறிவதற்கேதான், அறிஞர்கள் எழுதப்பட்ட நூல்களை, படிக்கவேண்டியதாகிறது. அப்படிப்படிப்பதாலேதான் அறியாமைச் சொற்களால் வரும், பகை பிளவு வாதம் சச்சரவு போன்ற நோய்களுக்கு அறிவு அன்பு நட்பு வாய்மை ஆகிய மருந் தைக்கொடுத்து இன்பப்படுத்த முடியும்.

இப்படிப் பார்க்கும்போது நாம் பலவகை மருந்துக்களை தெரிந் தவராகவும் இருக்கிறோம்.

இனி எதைச் செய்யத் தலைப்பட்டாலும் குணம் தன்மை தெரிந்தே செயலாற்ற முற்படவேண்டும். அப்போதுதான் ஒவ் வொன்றிலும் நோய் எது? மருந்து எது? என அறிந்துகொள்ள வழிகள் கட்டாயம் கிடைக்கும்.

சில நோய்களால் உடம்பில் உணர்ச்சி கெட்டுவிடுகிறது. அப் படிப்பட்டவர்களின் சொல், நடை, உடை எல்லாம் வேறுபட்டிருக் கும், கண்டோர் சொரணை கெட்டவன் என்று அவனைக்குறிப் பிடுவார்கள்.

அதேமாதிரி சிலர் உள்ளத்தில் நோய்களால் மான உணர்ச்சி கெட்டுவிடுகிறது.

சிலர் உடலில் ரத்தம் கெட்டு, மேனி என்ற சாயல் கெட்டு, மனிதத்தன்மை, ஆண்மைத்தன்மை கூட கெட்டுவிடுகிறது.

சிலர் உள்ளத்தில் மானம், வெட்கம், மரியாதை என்ற உயர் நடைக்குரிய குணமும் கெட்டுவிடுகிறது.

சில நோய்களால் நல்ல ஆராச்சித் தன்மையான சிந்தனை சக்தியும் கெட்டுவிடுகிறது.

அவ்வளவு ஏன் அறிவைக் கெடுக்கும் நோய்களுங் கூட உள்ளன. ஆனால் இவ்வளவிற்கும் மருந்து இல்லாமலில்லை.

இழிவறிந் துண்பான்கண் இன்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்—(குறள்)

பொருளின் குணங்களைத் தெரிந்து கெட்ட குணங்களைக் கொடுக்கும் உணவுப் பொருளை நீக்கி, நல்ல குணமாகிய உயர்ந்த உணவை உண்பவர்களிடத்து இன்பம் நிலைத்து நிற்கும். அப்படி யில்லாத தாழ்ந்த குணங்களைத் தரும் உணவுகளை அடிக்கடி உண்டால், அதனால்நோய் மிகும். நோய் அதிகரிப்பதோடு குணமும் கெடும். குணங்கள் கெடாமலும், உடல் நோயால் வருந்தாமலும் இருக்கவேண்டுமானால் உணவு முதலான பொருள்களின் குணங்களை நன்கு தெரிந்து பயன் படுத்த வேண்டும். (பொருள்களின் குணங்களை பதார்த்த குண சிந்தாமணி என்ற நூலில் காண்க).

இதுவரை பொதுப்பட நோயை ஆராய்ந்தோம் இனி நம் உடலில் நோய் எப்படி தங்கி என்ன செய்கின்றன என்று தெளிவோம்.

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று (குறள்)

நம் உடலில் நிறைந்த நோய் மூன்று அதாவது வாய்வு, பித்தம், சீதளம், எனப்படும். இம்மூன்றும் உடலில் இருந்து கொண்டுதான் உள்ளன. ஆனால் உணவுப்பொருள்களின் குணத்திற்கேற்ப இடம், காலத்தின் மாறுதலுக்கேற்ப எந்த குணம் அளவுக்கு மிகுதிப்படுகிறதோ அதன் பெயரால் நோய் ஏற்படுகிறது.

வாயு மிகுதிப்பட்டால் வாயு நோய்
பித்தம் மிகுதிப்பட்டால் பித்த நோய்
சீதளம் மிகுதிப்பட்டால் சீதள நோய்

உடலைப்பற்றி பாவுகிறது.

வாயு சம்பந்த நோய், நாடி நரம்பைப்பற்றியும், பித்த சம்பந்த நோய் குடலைப்பற்றியும் சீதளசம்பந்த நோய் ரத்தத்தைப் பற்றியும், உடலில் தங்கி நோய் செய்கின்றன. மருந்துகளால் உடனே மாற்றமடையாவிடின் உடல் நிலைகொத்த முறையில்

| | |
|---|---|
| வாய்வில்—வாய்வு | சீதளத்தில்—வாய்வு |
| வாய்வில்—பித்தம் | சீதளத்தில்—பித்தம் |
| வாய்வில்—சீதளம் | சீதளத்தில்—சீதளம் |
| பித்தத்தில்—வாய்வு | வாய்வில்—பித்த சீதளம் |
| பித்தத்தில்—பித்தம் | பித்தத்தில்—வாயு சீதளம் |
| பித்தத்தில்—சீதளம் | சீதளத்தில்—பித்த வாயு |

இப்படியாக குணங்கள் மாறி நோய்கள் வலிமையடைகிறது. அப்போது

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்
உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல் (குறள்)

என்றபடியான முறைகளை அறிந்த மருத்துவ அறிஞர்களைத்

கொண்டு நோயைத் தணித்தல் வேண்டும் நோய் வாராமல் முன் பாது காப்பாக

> மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
> தற்றது போற்றி யுணின் (குறள்)

என்றபடி உண்பதைத் தெரிந்து உணவின் குணந்தெரிந்து உலகப் பொருள்களின் தன்மை தெரிந்துகொள்ளும் முறையில் படிக்க வேண்டும்.

# கற்பனைக் கலை.

கற்பனைக்கலைகள், ஒரு நூல் வடிவமாக தனித்து இல்லாமல் எல்லா நூல்களிலும் கலந்து வந்து நுட்பங்களை சித்தரித்து விளக்கும்.

ஒன்றைப் பல வாக்கியும், பலவற்றை ஒன்றாக்கியும், உணர்ந் தோர்க்கு ஆச்சரியத்தையும், உணராதோர்க்கு மயக்கத்தையும் கொடுத்து நிற்பது. கற்பனைகள் இயற்கையின் செய்கையால் நிகழ்ந்து, செயலுக்கேற்ற வடிவு இல்லாதனவாய்; தோற்றத்தால் மாத்திரம் இருப்பது போல் நிசமும் ஓர் சக்தி, ஓர் நிலையாகும். அந்நிலை கண்ணுக்குத் தெரியும். ஆராய்ந்தால் அத்தோற்றத்திற்கு தனி வடிவு இல்லாமல் போய்விடும்.

ஒரு வீடு கற்பனை. அவ்வீடு இல்லை எனவும் முடியாது, அவ் வீடு எனும் பெயர்க்குரிய ஒரு பொருளைக் காட்டவும் முடியாது.

வீட்டைக்கட்டிய பொருள்களில் தனித்தனி பெயரைப் பார்த் தால் வீடு என்ற பொருளே ஒன்றும் கிடையாது. வீடு என்று பார்க்கும்போது தனிப்பொருள்கள் காணமல் மறைந்து விடுகின் றன. நாற்காலி, பெட்டி, தூண், என்னும்போது மரம் கற்பிதத் தால் மறைந்து விடுகின்றன. கை, கால், தலை, கண் என உறுப்பு

களைப் பார்த்துக்கொண்டே போனால் நான் என ஒரு உறுப்பு காண வில்லை, நான் என்று பார்க்கும்போது உடலே மறைந்துவிடுகின்றன. இப்படியே, உள்ள ஒன்றை மறைத்து, இல்லாத ஒன்றை கற்பிப்ப தற்குக் கற்பனை என்று பெயர்.

மண்ணினால் செய்த சட்டியில் உள்ளதான மண் மறைந்து இல்லாததான சட்டி என்ற பெயர் கற்பிக்கப்பட்டு விளங்குகிறது.

மரத்தினால் செய்தது பொம்மை. இங்கு பொம்மை என்ற போது மரம் மறைந்துவிட்டது. அம்மரத்தின் கற்பிதமான பொம்மை விளங்குகிறது. இங்கு மரத்தில் இல்லாத பொம்மை கற்பிதம்.

இப்படிப்பட்ட காட்சிகள் உலக இயற்கையில் நிகழ்வதை புல வர்கள் காண்கிறார்கள். புலவர்கள் ஒவ்வொன்றின் உண்மைகளை பகுத்தறிந்து பார்க்கிறார்கள், மக்களோ காண்பவைகளை அது அது வாகவே முடிவு செய்து விடுகிறார்கள்.

புலவர்கள்—ஒன்றை பலவாக்கி அணுவாக்கி நுட்பமாக உட் கருத்தை உணர்கிறார்கள்,

மக்கள்—கம்பத்தை கம்பமென்றும் வீட்டை வீடு என்றும் மனிதனை உடலாகிய மனிதனென்றே காண்கிறார்கள்

புலவன்—ஞானக்கண் கொண்டு பரந்த நோக்கமுடனும்.

மக்கள்—ஊனக்கண் கொண்டு பட்டதை பட்டவாறும் காண் பதால் புலவர்கள் உள்ளதை உள்ளபடி உணருகிறார் கள். மக்கள், உணரும் சக்தியை அடைவதில்லை.

அதனாலேயே எல்லோரும் கற்பனையால் ஏமாற்றமடையாமல் உண் மையை அறியவேண்டுமென்றே நூல்களில் விளக்குகிறார்கள் (சித்த ரிக்கிறார்கள்) வசனமாக எழுதி விரிவு படுத்தாமல் அழகு பொலியும் செய்யுளால் கோக்கப்படுகிறார்கள்.

இயற்கையமைப்பில் விளங்கும் கற்பனையை விளக்கினதுமட்டிலுமே புலவரால்லால் கற்பனையை உண்டு பண்ணினது புலவரல்ல எப்படி? காடுகளில் நன்கு வெய்யில் காயும்போது கானல் வேகமானது நீர் மாதிரி ஓடுகிறது. இதை கானல் நீர் எனவும் கூறுவர். இந்நீரை தண்ணீரென விலங்கினங்களும்மக்களும் கூட தேடித்தேடி களைத்துவிடுவதை யறிந்த புலவர்கள் கானலை நீரென நம்பி ஏமாராதீர்கள் என நூல்களில் விளக்குகின்றனர். இங்கு கானலில் இல்லாத நீர் தோற்றத்தால் உண்மைபோற், றோன்றினது கற்பிதம் ஆகிறது.

ஆற்றங்கரைகளிலுள்ள கிளிஞ்சல்கள் சூரிய ஒளி பட்டவுடன் வெள்ளிபோற்றோன்றுகின்றன. கிளிஞ்சலில் வெள்ளி இல்லை ஆனால் காண்கின்றது இது புலவர் செய்ததல்ல. ஆனால் இயற்கையின் கற்பிதத்தை புலவர்கள் விளக்குகிறார்கள்.

குளத்தில் கெண்டைகள் துள்ளி விளையாடுகின்றன. அதன் பக்கத்தில் பெண்களும் விளையாடுகின்றனர். பெண்களின் முகத்தில் உள்ள கண்ணாகிய குளத்தில் நீர் நிறைந்து ததும்பவும் அந்நீரினிடையில் கெண்டைபோன்ற விழி புரழ்வதையும் சித்தரிக்கும் அழகு இயற்கைக் கற்பிதத்தின் எழிலை விளக்குவதாயிருக்கிறது.

ஆச்சரியத்தை விளக்கும் சில நிகழ்ச்சியின் மேல் அச்செயலின் திறமை நுட்பம் வலிமையை தெளிவு படக்கூறுவதற்குத் தகுதியான எடைகளையும் அச்செயலின் மீது ஏற்றிக்கூறி இருப்பார்கள். அது கற்பனையின் வலிமை நிலையைக்கூறும் நிறைகோலாக அங்கு விளங்கும்.

புலவர்கள் ஒரு நிகழ்ச்சியை கூறும்போது அந்நிகழ்ச்சியின் பல நிலைகளையும் காட்சிகளையும் காலம் இடம் செயல்களையும் குறிப்பாக விளக்குவதற்காக உதாரணம் என்ற எடைகளைக்கொண்டல்லது எப்படித்தான் ஒன்றை விளக்க முடியும்!

ஒரு வீரன் குன்றையொத்த புயமும், இரும்பையொத்த நெஞ்சும், மலையை ஒத்த தோற்றமும் பொலிய கண்டோரெல்லாம் கலங்க நின்றான் என ஒரு நிகழ்ச்சி வருகிறது.

இதில் புயம் குன்றுபோல் இல்லை. நெஞ்சு இரும்பு போல் இல்லை ஆனல் கண்டோரெல்லாம் கலங்கி நின்றது மட்டிலும் உண்மை.

இவ்வுண்மையான கலங்குதலைக்கொண்டு இவ்வளவு மக்களும் அஞ்சி கலங்கிய நிலை, மலையளவாகிறது, குன்றளவாகிறது இரும்பு போன்ற வன்மையும் நெஞ்சுக்காகிறது.

நிலையிற் றிரியா தடங்கியான் தோற்றம்
மலையினு மாணப் பெரிது (குறள்)

அதாவது தனது நிலைமையிலிருந்து தப்பாது அந்நிலையிலேயே நின்றவன் தோற்றம் மலையை விட பெரிது

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை (குறள்)

தன்னிலையில் உறுதியாக நில்லாமல் தவறித் தாழ்ந்தவன் நிலை தலையிலிருந்து தவறிய மயிருக்கும் கீழ் நிலையடைவான் என்பதால்

ஒழுக்க நிலை மாறாதவன் எடைமலையை விட பெருத்தும், தவறியவன் எடை மயிரினும் தாழ்ந்தும், விளங்குவதை புலவர்கள் மக்களுக்குத் தெளிவுபடுத்தியில்லையானல் மக்கள் கற்பனையில் மயங்கி உண்மையுணரமாட்டாமல் அலைந்தே அழிவரல்லவா!

இக்கற்பனைகளை புலவன் செய்ததாக நினைக்கக்கூடாது. விளக்கினது மட்டிலும் புலவன் என உறுதி கொள்ளல்வேண்டும் எப்படி ?

ஒருவன் செல்வத்திலோ கல்வியிலோ வீரத்திலோ வலிமை பெற்று அவ்வலிமை சக்தியிலிருந்து தவறாமல் நடப்பானயின் அவன் நிலை ஒரு தேசம் வரை நன்கு தெரிகிறது. ஒரு பொருள் எவ்வளவு உயரமிருந்தால் ஒரு நாடு வரைக்கும் தெரியும் என்று சிந்தித்துக்கொள்.

தன்னை அடைந்து உதவி கேட்போரையெல்லாம் அன்போடு காக்கிறான். எவ்வளவு நிறைந்த வளம் இருந்தால் அஞ்சாது அன்புடன் ஆதரவு செய்ய முடியும் என சிந்தித்துக்கொள்.

நன்மைகள் எப்படி மலையளவு குன்றளவு கடலளவு வானளவு உலகத்தளவு கூட நிரம்பும் சக்தியை அடைகிறதோ அதேமாதிரி கெடுதல்களும் பனையளவு குன்றளவு மலையளவு வானத்தளவு உலகத்தளவும் பெருகுகிறது. எப்படியெனில் நாம் ஒருவரை சந்தித்துப் பேச முயலுகிறோம் அல்லது ஒன்றைக் கேட்கிறோம். அதற்கு அவர் பதில் சொல்லவேண்டிய நேரத்தளவு இரண்டுமாத்திரையாகும். நாம் படிக்கும் பாடத்தில் ஓர் வினா வந்தால் எவ்வளவு நேரம் நிறுத்தி விடையைப் படிப்போமோ அந்த நேரம்தான் இடை நேரமாகும். அதற்கு மேல் எத்தனை மாத்திரை வீணாகக்கழிகிறதோ அம்மாத்திரை நேரமெல்லாம் சேர்ந்து பனையளவாகும் மலையளவுமாகும் அப்படி பதில் பேச உடனே இடங்கொடுக்காமல் தடுத்த குணந்தான் திமிர், இறுமாப்பு, அகம்பாவம், உட்பகை என்றெல்லாம் கூறப்படும் ஒருவனிடத்தில் இப்படிப்பட்ட தீய குணம் எவ்வளவு எடை இருக்கலாமென்று காண்பதற்கு நிறைகோலாக கேள்விக்கு பதில் கூறும் இடை நேரத்தாலும், சொல்லும் பேச்சின் தடிப்பாலும், சொல்லும்போதே பார்க்கும் பார்வை, நடக்கும் நடை, உறும் அதிர்ச்சி, முகத்தின் காய்வு, முதலியவைகளால் நன்கு எடை போட்டு விடலாம். இப்படி நல்லனவற்றிற்கும் தீயனவற்றிற்கும் அளவு தெரிந்துகொள்ள வேண்டும்.

ஒருவனைத்தாண்ட, மீற முடியாமல் அவனைக் கேட்டே அனைத்தும் செய்கிறார்கள். இதனால் எவ்வளவு அகலம் திண்மை இருக்கலாமென்று எண்ணிப்பார். இப்படியாக உள்ள ஒருவனை மலைபோன்ற நிலையுடையான் என்று சொன்னால் அதில் என்ன தப்பு இருக்க முடியும். இதே மாதிரி

பயன் றூக்கார் செய்தவுதவி நயன் றூக்கி
னன்மை கடலிற் பெரிது

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது (குறள்கள்)

என்பனபோன்ற குறிப்பினுல் செயலின் அளவை எடைபோட்டு அறியவேண்டி இருக்கிறது.

கடலை எடை போட்வும் பூமியை எடை போடவும் இவ்வுலகத்தை எடை போடவும் ஆகாயத்தை எடை போடவும் நம் நாட்டு அறிஞர்கள் குறிப்பறிதலென்னும் உதாரண எடை கல்லுகள் வைத்திருந்தார்கள்.

இந்தியாவுக்கே அரசியல் சுதந்திர பாதையை வகுத்த ஒப்பற்ற மகாத்மா காந்தியை எல்லா இடத்திலும் நிறைந்திருக்கிறூர் என்று ஒரு புலவன் விளக்குகிறுன் ஆனுல் அவர் எங்கும் உடலோடு நிறைந்திருக்கவில்லை. ஒவ்வொருவர் எண்ணத்திலும் இல்லாமலும் இல்லை. அந்நிலையை புலவன் சித்தரிக்கிறுன். எல்லாருடைய உள்ளத்திலும் நிறைந்திருப்பது எதுவோ அது எல்லாமாயும் எங்குமாயும் உள்ளதேயாம் என்ற நிலையை காந்திமேல் இணைக்கும்போது காந்தியும் எங்கும் நிறைந்தவராகிறூர்.

நம் திராவிட நாட்டில் சீர்திருத்தப்பாதையை வகுத்தவர் பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர் சீர்திருத்தம் என்ற நிலையில் எல்லோருடைய உள்ளத்திலும் தங்குகிறூர். யார் எல்லோருடை உள்ளத்திலும் தங்கும் சக்தியைப் பெருகிறூர்களோ அவர்கள் எங்கும் இருப்பவர்களேயாகிறூர்கள். புத்தர், ஏசுகிரிஸ்து, மகமது நபிகளும் அப்படிப்பட்டவர்கள்தான் ஆவார்கள்

ஐயப் படா அகத்த துணர்வானை
தெய்வத்தோ டொப்பக் கொளல் (குறள்)

என்பது உண்மை சட்டம்.

யாரொருவர் இவ்வுலக நிகழ்ச்சியில் சந்தேகம் தோன்றுமல் உள்ளதை உள்ளபடி உணரும் சக்தியை அடைகிறுர்களோ அவர்கள் இயற்கையின் தெய்வ சக்தியை அடைந்தவராகிறுர்கள்.

பரமன், பிரமன், நாராயணன், முருகன், கிருஷ்ணன், இராமன், வள்ளுவன், பார்வதி, லட்சுமி, ஔவை போன்றுர்களும் நம் நாட்டுத் தலைவர்களே ஆவார்கள். இவர்கள் மக்களின் உள்ளத்தை அறிந்து எல்லாவற்றையும் தெரிந்து செயலாற்றி அவ்வக்காலத்தில், நாட்டை நடத்தியவர்களாதலால் நன்றிமறப்பது நன்றன்று என்ற முறைப்படி தலைவர்களை வணங்கி வந்தனர்.

ஆனுல் தலைவர்கள் வகுத்த திட்டங்களை படிப்பதிலும் நடப்பதிலும் எண்ணமில்லாமல் வணங்குவதிலும் கேட்பதிலுமாக மாறி விட்ட தன்மையே இன்றைய கீழ் நிலைக்குக் காரணமாயும், பண்டைய நன்னெறிகளை கூறி மக்களை உயர்த்துவதே தேசசேவை தேசத் தொண்டாகவும் இன்றைய நிலை அமைந்துள்ளன.

தலைவர்கள், பண்டைய அறிஞர்கள், எழுதிய கூறிய நூல்களுக்கு முதனூல் என்று பெயர். அப்படிப்பட்ட முதனூல்களில் எவ்வித தவறும் குறைகளும் இல்லாமல் சமத்துவமாக வாழ்ந்து இன்பமடைவதையே கூறியுள்ளனர். ஆனுல் அத்தலைவர்மீதோ அத்தலைவர்களின் நாடு மீதோ பிறரால் எழுதப்பட்ட வழி நூல்கள், சார்பு நூல்கள், எனப்படுபவைகளேதான். பொருத்தமற்ற சில நோக்கங்களை இயற்கைக்கு மாறுகவும், வேடிக்கையாக விளையாட்டாகவும் எதிர்கால நிலையறியாதவாறு சில பகுதிகள் உள்ளன.

இவைகளை அறியவேண்டுமானுல் முதனூல்களை படிக்கவேண்டும், அப்படியின்றி ஆரம்பத்திலேயே வழி நூல்களை படிப்பதால் வழி நூல்களில் கூறும் வேடிக்கை விளையாட்டுகளெல்லாம் உண்மையானவைகளென்று உள்ளத்தே ஊறிவிடலால், நிறைந்த ஆற்றல் எது? என்று தோணுத இடைக் கற்பனையே மக்கள் நடைமுறையாக ஆகி, மற்றவர் புத்தி சொல்லும், நிலை ஏற்படுகிறது. ஆதலால் இயற்கைக் கற்பனைகளை நன்கு தெரிந்து கொள்ளும் முறையில் படிக்க வேண்டும்.

செயற்கரிய செய்வர் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார் (குறள்)

மக்களுக்குள் சில சமயம் அரியவற்றுளெல்லாமரிய செயல் நிகழ்கிறது. அது ஒரு சிலரிடம்தான் நிகழ்கிறது. அப்படி நிகழும் அதிசய செயல்களை விளக்கமாக எழுதிவைக்கவில்லையானால் எதிர்கால மக்கள் உணர்ச்சியை எப்படித்தான் வளர்க்கமுடியும் அதற்காகவே அவ்வக்கால புலவர்கள் தக்க உதாரணத்துடன் செய்யுட்களாக நிலைப்படுத்தி உள்ளனர்.

அறிவினால் நிகழ்ந்த செயலை மற்றையோர் அறிவைக் கொண்டல்லது அறிய முடியாது.

புத்தியால் நடத்தும் செயலை மற்றையோர் புத்தியைக் கொண்டல்லது உணரமுடியாது. மனதால் அமைத்த செயலை மற்றோர் மனதுடையவனல்லாதோனால் காண முடியாது.

அதேபோல் ஒவ்வொரு குணத்தின் செயலை அதே குணமுடைய உதாரணத்துடன் தான் கற்பிக்க முடியும்.

அறிஞன் மட்டிலும் எல்லா குணங்களையும் உணர்வான். உணர்ந்த அறிஞன் அதை விளக்க எப்படிப்பட்ட உருவத்தை கற்பித்துக் கூறி இருந்தாலும் அதன் உண்மை தெரிவதே நமது படிப்பாக இருக்கவேண்டும்.

எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு

என்றபடி உண்மையறிவதே கற்பனைக் கலையாகும். கற்பனைகள் மக்களை மயங்கவைப்பதாகவோ அல்லது ஐயப்படத்தக்கதாகவோ இடம் தந்து நிற்கிறது. அதன் உண்மையை உணர்ந்துகொண்டபோது கற்பிதம் ஒரு உண்மையைக் காட்டுவதாக ஆகிறது. உணராதபோது மயக்கத்தை ஊட்டுகிறது. அறிந்த பிறகு கற்பனை கற்பனையே யாகிறது.

ஆகாயத்தில் நீல நிறம் தோன்றுகிறது ஆராய்ந்தால் ஆகாயத்தில் நீலம் இல்லை. கடல்நீர் நீலநிறமாகத் தெரிகிறது ஆராய்ந்தால் கடல் நீரில் நீலம் இல்லை. சந்திரன் சூரியன் காலன் இவர்களை மனிதன் மாதிரி அழைத்தும் எழுதியும் வருகிறோம். ஆராய்ந்தால் அவைகளிடம் மனிதத்தன்மை கிடையாது.

ஆகாயத்தில் ஓர் வில் தோன்றுகிறது, ஆராய்ந்தால் அவ்வில் தோற்றமாக மறைகிறது. இதுபோன்ற இயற்கைக் காட்சிகள் மக்களை மயக்க நிலைக்குக்கொண்டுபோவதால் அம்மயக்கத்தை கற்பனையாக்கி புலவன் விளக்கமாக சித்தரிக்கிறான்.

இயற்கைச் சக்தி மக்களுக்கு கற்பனை மூலம் புதிய அறிவை கற்பிக்கிறது, கற்பித்துக்கொண்டே இருக்கிறது, இயற்கை உலகை ஓர் பாடசாலையாக்கி நடக்கும் கற்பனைகளை பாடமாகக்கொண்டு நம் அறிவை, அல்லது பண்டைய அறிஞரை ஆசிரியராகக்கொண்டு உட் கருத்துக்களை தெரிந்தால் அது ஒரு விஞ்ஞான வகுப்பாக முடியும்.

ஒவ்வொரு புராணத்தின் முகப்பிலும் நாட்டுப்படலம் நகரப் படலம் என வரும் பகுதிகளில் இயற்கைக் கற்பனு வர்ணனைகள் ஒரு புது உலகையே கற்பிப்பனவாக இருக்கும்.

இப்பொது கற்பனை என்பது படிப்பினை என்றும்கற்பிக்கும் என்பது படிப்பிக்கும், கற்றுக்கொடுக்கும் என்றுவதறிக.

இங்கு கற்பனை என்பது இயற்கை யன்னை மக்களை உயர்ந்த நிலைக்குக்கொண்டுபோகக் கற்பிக்கும் பாடம் என்ற முடிவுக்கு வந்தோம்.

தோழுக்குக் குன்றையும், முகத்திற்கு மதியையும், மயிருக்கு மேகத்தையும் கண்ணுக்குத் தாமரை, மூக்குக்குக் குவளை, பல்லுக்கு முல்லை, இதழுக்கு கோவை போன்ற உயர்ந்த உதாரணப் பொருள்களைக்காட்டி ஒழுக்கத்தை உயர்த்தவே இயற்கையும் புலவர்களும் சயலாற்றி வந்துள்ளனர் என்று தெரிகிறது.

கற்பனை என்பது புதிதாகக் கற்பிக்கும் ஓர் பகுத்தறிவு. அப்பேரறிவைப் பெற்றவன் நாட்டை ஒரு புது முறையாக அமைக்கும் சீர் திருத்த அரசியலில் பிறர் மெச்ச பல செயல்களைச் செய்யலாம், சொல்லலாம்.

கற்பனை யறிவுள்ளவர்கள் கற்பித்ததே இன்றைய யந்திரங்கள், புது முறை சாதனங்கள் ஆகும்.

இப்படியாக உள்ள சக்திகளில்

மனோசக்தி — நினைவை வளர்க்கும்
அன்புசக்தி — நட்பை வளர்க்கும்
மதிசக்தி — பொருளை வளர்க்கும்
சிந்தனாசக்தி — கல்வியைப்பெருக்கும்
அறிவுச்சக்தி — ஞானத்தை வளர்க்கும்
காதல் சக்தி — வாழ்க்கையைக் காக்கும்
கற்பனாசக்தி — நாட்டை உயர்த்தும்

ஆதலால் இவ்வித சக்திகளைப் பெற்று நாம் நன்றியோடு உயர்ந்துவாழும் தன்மைக்காக நம் அறிவு நூல்களின் வழிகள் இக் காலத்திற்கும், எதிர்காலத்திற்கும், பொருந்தியுள்ள உண்மைகளை அறியும் முறையில் படிக்கவேண்டும்.

## தொழில் கலை.

தொழிற்கலைகள் மக்களிடத்து இயற்கையாகவும் செயற்கையாகவும் அமைந்து மக்களை நடத்துகின்றன. மக்களின் நன்மைக்காக அமைந்த தொழில்கள் இன்று தொழிலின் நன்மைக்காக மக்களை நடத்தி வருகின்றன. மக்கள் விருப்பத்திற்காக உணவு உடை இடம் அமைக்கப்பட்டுள்ளன.

ஆரம்பத்தில் மனித சமூகம் ஒரே இனமாயிருந்தே பல தொழிலைச் செய்திருக்கிறார்கள். கால நிலை ஓடிக்கொண்டிருப்பதால் இப்

போது அவ்வத் தொழில் புரிந்தோர் ஓர் இனமாகப் பிரிந்திருக்கிறார்கள். ஆனால் அன்று தொட்ட தொழிலை இன்று வரை ஒவ்வொரு குடும்பமாகிய பரம்பரை சலியாமல் செய்து உழைத்துக்கொண்டே வருகிறது.

ஒரு சிலர் செல்வரென்னும் உழைக்காதோர் ஆகலாம். சில செல்வர் உழைப்பாளியாகலாம் அத்தொழிற் கூட்டம் சலித்த பாடில்லை ஏன் அப்படி? அவர்கள் சலித்து ஒரு நாள் தொழிலை விட்டால் பட்டினிதான் கிடக்கவேண்டும் அதற்கடங்கி இரவும் பகலும்கூட தொழிலைச் செய்கின்றனர்.

விறகு விற்பது ஒரு தொழில், இத்தொழிலாளிகள் மலை, காடுகளுக்குச்சென்று மரத்தை வெட்டி அல்லது கட்டைகளைப் பொறுக்கிக் கட்டிக்கொண்டுவந்து இன்ன விலை என்று நிர்ணயமில்லாதபடி கண்டவர்கள் கண்டபடி கேட்க அவ்வளவையும் பொறுத்து தன் குடும்பத்திற்கு ஓரளவு அரிசி உப்பு புளி மிளகாய்க் காவது கட்டும் அளவுக்கு விற்க எதிர்பார்த்து, அந்த அளவு வரும் வரை மலையில் தூக்கிய தலைச்சுமையை இறக்காமல் சுமந்து விற்று கடையில் ஒரு நாளைக்கான எல்லாப் பொருளையும் பிரித்து பிரித்து வாங்கி பின் வீட்டுக்குப் போய் காலையில் விட்டுப்போன குழந்தையை எடுத்து மகிழ்விக்கச் செய்து, விரைந்து சமைத்து உண்டு தூங்கி பின் விடியற்காலை மலைக்குப் புறப்படும் அந்நிலை அன்று தொட்டு இன்று வரை ஒறு சிறிதும் மாறவில்லை.

அவர்களின் வாழ்க்கையிடம் சொந்தமற்ற 10 அடி அகலம், 10 அடி நீளம் அதிலுள்ள குடிசை ஒரு கத்தை மூங்கில், ஒரு சுமை புல், அக்குடிசையின் சுவர் 2 அடி உயரம் 1 அடி அகலம் சுற்றுவடிவம் இதன் கதவு தென்னை ஓலையில் பின்னிய ஒரு தடுக்கு, இவர்கள் குளிக்க கிணறு இல்லை நேரமுமில்லை, இவர்கள்எண்ணைத் தேய்த்து முழுகும் நாளே தீபாவளி அதுவும் அன்றைய இனும் பணத்தில் தான் நிகழும். இனும் இல்லையானல் அன்றும் தொழில் செய்தே ஆகவேண்டும். இப்படியே பல தொழிலாளர் சமூகங்கள் இருந்து வருகின்றன.

ஒழுக்கமுடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும் (குறள்)

என்றபடி தொழிலாளர்களால் ஒழுக்கங்களை பாதுகாக்க நேரமில்லாமல் இழுக்கத்திற்காளாகி தாழ்ந்த பிறப்பாளரென்று கூட சொல்லத்தக்க நிலையை உழைப்பாளிகள் அடைந்துவிட்டனர்.

எந்தத் தொழில்களில் வேலை நேரம் அதிகப்பட்டு ஒய்வு நேரம் குறைந்து உள்ளதோ அத்தொழிலாளர்கள், நாகரீகமுடன் இருக்க முடிவதில்லை. அத்தொழிலாளர்களின் குழந்தைகளும் அத்தொழிலையே குலத்தொழிலாகக்கற்று, உழைத்து, வருந்தும் சிறு குழந்தைகளும் மாதம் 1, 2 ரூபாய் சம்பளத்திற்கு அடிமைத்தன்மையை பழகியும், வறுமையின் கொடுமை தன் அறிவு, தன் மனையாள், தன் குழந்தை ஆகிய அனைவர்களையும் அடிமைப்படுத்தி அறியாமையை வளர்த்தும் வந்துள்ளது.

தொழிலாளிகள் தங்கள் தொழிலை மாற்றியமைத்து சற்று களைப்பார இடம் கொடாமல், அவ்வக்குலத்தவர்கள் அவர் குலச் செயலே புரியவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டும், மீறினால் குத்தம் தண்டனை விதித்தும், தாழ்ந்தவர்களை மீற விடாமல் கட்டுப்பாடுடன் தாழ்த்தியும் வந்துள்ளனர்.

ஒழுக்கத்தோடு ஒய்வுள்ள தொழிலைக் கைக்கொண்ட கூட்டத்தார்கள் தங்களை உயர்ந்தவராக மதிக்கத்தக்க உடை உணவு வீடு குளிப்பு அலங்கரிப்பு இவைகளால் உயர்வாகத் தோன்றுவார்கள், குழந்தைகளோ படிப்பு சங்கீதம் அறிவு இவைகளைப் படிப்பார்கள்.

ஓய்வான செயலுடையவர்களுக்கு யோசனை அதிகமாக இருப்பதுடன் நாலாவித மக்களையும் சேர்ந்து பலவித வழிகள் புலனாகின்றன. ஓய்வால் அறிவு பெற்றவர்கள் உழைப்பால் அறிவிழந்தவர்களை எத்தனை வகையால் ஏமாற்ற முடியுமோ அத்தனை வகையையும் கையாளப்படுகின்றனர். அதனால் தன்னுழைப்பு செலவானாலும் தந்திர உழைப்பு மீதிப்படுகின்றது. அவ்வித மீதியால் மேலும்

மேலும் தந்திரங்களைக்கொண்டு மீதப்படுத்துவதே ஒரு சமூகமாக வளர்கின்றன.

இச் செல்வச் சமூகத்திற்கு, தொழிலாளர்களும் தம்போன்ற மக்களேதான் என்ற உணர்ச்சியே எள்ளத்தனையும் பிறப்பதில்லை. ஏழைகள் சிறிது ஒழுக்கத்தைக் கைகொண்டாலும் பொறாமை கொண்டு சினந்து திட்டி அவ்வொழுக்கப் பயிரை களைவதே முதலாளிகளின் முதல் வேலையாகக் கொள்வார்கள்.

தொழிலாளியின் வீட்டுக் குழந்தை படிக்கப்போனால் உடனே உங்களுக்கு படிப்பில்லாமல் என்ன குறைந்துவிட்டது, பணம் வந்தால்படியில் அளந்து கொள்ளலாம் என தடுத்துப் பேசுவார்கள்.

தலைக்குக் கொஞ்சம் எண்ணை, துணி கொஞ்சம் வெள்ளை, அடிக்கடி குளிப்பு, இவைகளைக் கண்டுவிட்டால் ஏதடா தலைக்கு மிஞ்சிப்போரே என கண்டிப்பது போன்ற தடைகள் குறுக்கிடும். இப்படியான நெருக்கடியில் சிக்கி தொழில் சமூகங்கள் தத்தளிக்கின்றன.

## உணவு - உடை.

தொழில்களில் சிறந்த முதற்றொழில்கள் இரண்டு. முதலாவது வேளாண்மை அதாவது உணவுஉற்பத்தித் தொழில். இத் தொழில் நம் நாட்டில் அரசாங்கத்தில் இணைக்கப்பட்டு எல்லா உதவியும் அரசாங்கம் செய்து கொடுத்து, ஆறிலொரு பங்கு அரசாங்கம் அடைந்து வந்துள்ளன. அப்போது வேளாண்மைத்தொழில் தலை சிறந்து நல்ல பலனை கொடுத்து மக்கள் இன்பமாக வாழ்ந்து வந்தனர். நல்லவளத்துடன் நாடு செழித்திருந்ததால் அதிக மழை பொழிந்தவண்ணம் இருந்து, ஏரி குட்டை ஓடை ஆறுகள் நிறைந்து தண்ணீர் தேங்கி கால்வாய்களில் தாமரையுங் குவளையுங் கலந்து வாழ்ந்து, சங்கும் முத்துச்சிப்பிகளும் நிறைந்து, உழும்போது கால்களில் தடைபடும் என்ற செழிப்பு முறையை நூல்கள் புகழுகின்றன. இன்று அவைகள் அறவே மாறி மழைநின்று பூமி வரண்டு

பட்டினிப்பாட்டுகள் மலிய நேர்ந்துள்ளன. விவசாயத் தொழிலாளர்களும் படிக்க நேரமின்றியே தொழில் செய்கின்றனர் அதனால் முரட்டுத்தனமான சச்சரவுகளால் செலவு அதிகம். வேளாண்மை செழிக்க மழைவேண்டும் மழைக்கு செழிப்பான மரங்கள்வேண்டும் இவைகளையெல்லாம் அரசாங்கம் அமைத்துக்கொடுத்து வேளாண்மையை செழிக்கவைத்தாலன்றி

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு

என்றபடி நாடு சீர்பட்டு வாழாது நாடு சீர்படாதவரை அரசாங்கம் அமைதியுராது ஆதலால் இம்முதற்றொழிலை காக்கப்படல் வேண்டும்.

இரண்டாவது உடை, இத்தொழிலும் இந்நாட்டுக்கு இயல்பானதே. உணவுக்கு மேல் மக்கள் உடையை நாடுகின்றனர். உடை தயாரிக்கும் தொழிலாளிகள் இந்நாட்டில் நிறைந்து வாழ்கின்றனர். இவர்களுக்கு நூல் முதற்காரணம் இத்தொழிலாளர்கள் யாருடைய பாதுகாவலுமின்றி தாங்களே குடும்பத்தார் அனைவரும் சேர்ந்துஉழைத்து வயிறுவளர்ப்பதே இவர்கள் உழைப்பின் பயன். இத்தொழிலாளர்களில் பெரும்பான்மையோர் சொந்த வீடின்றி வாடகை வீட்டில்தான் வசிப்பர். மற்றொருவரின் கீழிருந்து அடிமையாக வாழ்வதே இவர்களுக்கு முதற்பாடம். இத்தொழிலாளிகள் முன்னுக்குவா முடியாதபடி இவர்களுக்குள் சூதாட்டம் கள் குடித்தல் என்ற இரண்டு கெட்ட பழக்கங்கள் குடிகொண்டிருந்தன எவ்வளவு வேலை செய்தாலும் அடுத்த நாளைக்கு வேண்டுமே என்ற புத்தி இத்தொழிலாளரிடம் இல்லாமலழிந்துவிட்டன.

இவர்களை தன்னகத்தே கொண்ட முதலாளிகள் இவர்கள் போகும் கெட்ட பழக்கத்தை இன்னும் வலிமையாக்கி எருப்போட்டு மடமைக்கு செலவும் செய்து தாழ்ந்த வறுமையை வளர்ப்பார்கள்.

இப்படியாக உள்ள கைத்தறித் தொழிலையும் அரசாங்கம் கைக் கொண்டு தொழிலாளர்களை விடுதலையாக்கி அறிஞராக்கி, குழந்தைகளைப் படிக்கச்செய்து கூட்டுறவில் இவர்களைச் சேர்த்து வாழ்விக்கச் செய்தால், உணவு உற்பத்தியாளரான வேளாண்மைத் தொழிலாளரையும், உடை உற்பத்தியாளராகிய கைத்தறித் தொழிலாளரையும், நம்பியுள்ள சகல கைத்தொழிலாளரும் சுகமடைவார்கள்.

தொழிலாளர்கள் சுகமடைவதே அரசாங்க உயர்வாகும்
தொழிலாளர்கள் நாகரீகமே நாட்டின் உயர்ந்த நிலையாகும்
தொழிலாளர்கள் ஒற்றுமையே அரசியல் வெற்றியாகும்.
தொழிலாளர்கள் உழைப்பின் திறமையே
நாட்டின் அமைதியான இன்பமாகும்.
தொழிலாளர் வறுமையே அரசாங்க வறுமையாகும்.
தொழிலாளர்களின் தாழ்வே நாட்டின் தாழ்வாகும்.
தொழிலாளர்களின் கிளர்ச்சியே அரசாங்க அநீதியாகும்.
தொழிலியக்கமே செங்கோலின் நிர்வாக அங்கமாகும்.

ஆதலால் தொழிற்கலைகளை நன்கு மக்கட்கு விளக்கி தொழிலாளருக்கே உணவு இடம் சிறப்பாகக் கொடுத்து, தொழிலாளரின் வாழ்க்கையை உயர்த்தவே இன்றைய பாடசாலை, வைத்தியசாலை, நீதிமன்றம், முதலிய எல்லா வளங்களையும் அமைத்து எல்லோரும் ஒன்றுபட்டு வாழும் நிலையை உணரும் எண்ணங்களுடன் படிக்கவேண்டும்.

தொழிலாளர்களுக்கென எழுதிய திருக்குறளில் "வினைத்திட்பம், வினைச் செயல்வகை, வினை தூய்மை, தெரிந்துவினையாடல் போன்ற திட்டங்களை அறிந்தும் உயர்ந்த நோக்கத்தைத் தெரிந்துக் கொள்ளும் முறையிலும் தொழிற்கலைகளைப் படிக்கவேண்டும்.

# காதல் கலை.

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலர் கண்ணே உள (குறள்)

**கா**தல் நூல்கள் நம் நாட்டில் நிறைந்து சிறந்து உள்ளன. பழங்காலச்சங்க நூல்கள் பெரும்பாலும் காதல் தன்மையிலேயே பொது நீதியை உட்கொண்டிருக்கின்றன. ஞான நூல்களிலுங் கூட தலைவன், தலைவி, துணைவன், துணைவி, நாயகன், நாயகி, முறையிலும், கிளி, குயில், மயில், தென்றல் இவைகளின் தூதாகவும் காதலின் கருத்துக்கள் நிறைந்துள்ளன.

காதல் என்பதில் ஒவ்வொரு உயிரின் நட்பு முறையும், உணர்ச்சியோடு ஒடுங்கப்பட்டிருக்கின்றன.

கால நிலைக்கேற்ப இக்காதற் சக்தி, மக்களிடையில் உயர்ந்த எண்ணங்களை ஊட்டி நாகரிக வாழ்க்கையில் மேன்மைப் படுத்தும் ஆற்றலில், தலை சிறந்த பகுதி யாகும். அதோடு இயற்கை யமைப்பின் சிறப்புகள் எனினும் பொருந்தும். காதலின் ஆற்றல் காலத்தின் மேல் பாய்கிறது. கால ஓட்டம் உலகை ஆட்டுகிறது உலக ஆட்டம் நிற்கவேண்டுமானல். கால ஓட்டம் நின்றாகவேண்டும். காலம் ஓடிக்கொண்டே இருக்கிறது. அது 60 நாழிகையை (24 மணி நேரத்தை) ஒரு அளவுள்ள கட்டமாக அமைத்து அதை சுற்றிக்கொண்டே இருக்கிறது.

மரம், செடி, கொடிகளும் ஒவ்வொரு சுற்றை தன் வாழ்நாளில் ஒரு நாளாகக் கொண்டு தன் செயல்களைச் செய்கின்றன. காலையில் பூக்கும் பூக்களை செடிகள் கொடிகள் தவராமல் மலர்விக்கின்றன. மிருகங்கள் பறவைகள் 24 மணி நேரத்தையே ஒரு நாளாக எண்ணி காலை எழுந்து, பகலெல்லாம் உணவு தேடி, மாலையில் இல்லம் வந்து இரவில் தூங்கி காலை எழுவதில் எவ்வித மாறுபாடும்

கிடையாது. எவ்வுயிரும் நேரத்தை அளவாக வைத்தே ஓடுகின்றன. காலமும் ஓடிக்கொண்டே இருக்கின்றது. ஓடின பகுதி திரும்புவதே கிடையாது. நாம் போன காலத்தை திரும்பிப் பார்க்கலாமென்றாலும் இப்போது போகும் நேரத்தை வீணாக விட்டாலன்றி முடியாதாகையால், இந்நிலையை காலத்தோடு இணைத்து சிந்தித்துப் பார்க்கும்போது, உலக அமைப்பும் அதில் வாழும் உயிர்களின் அமைப்பும், உயிர்கள் உடலை வளர்க்க உணவு தேடும் அமைப்பும், இரவில் எல்லோரும் ஓய்வெடுத்துக் கொள்ளும் இன்ப அமைப்பும், இயற்கையாகவே ஓடிக்கொண்டிருக்கின்ற காட்சி பேரின்பமான இனிய காட்சியாக விளங்கும்.

இந்நிலையில் அணு நேரமும் வீண் நேரமாக அடையாமல் கண்ணுக்கினிய காட்சியும், காதுக்கினிய ஓசையும், மூக்குக்கினிய மணமும் நாக்குக்கினிய சுவையும் உடலுக்கினிய உணர்ச்சியும் நீக்கமற நிறைந்து அவரவர்கள் எண்ணியப் பொருள்களைக் கொடுத்து இன்பமடையச் செய்யும் இவ்வுலக இன்பத்தை எல்லோரும் சுகித்து மகிழவேண்டுமென்பதே இயற்கையன்னையின் எண்ணமாகும்.

இந்நிலையைப் பலர் உணர மாட்டாமல் பரந்த உள்ளத்தை குறுகிய பழக்கத்தால் தடுத்து, சுதந்திரமுடனிருந்த குணங்களை சாதி, குலம், மதம் என்ற கூண்டிலடைத்து, மீண்டும் பரந்த நிலையை அறிவு பழக விடாமல் குணங்களை முடமாக்கி சாரதி இல்லாத வண்டி மாதிரி, அறிவில்லாமல் நடக்கும் உடலாக்கி சீர்கெட்டுள்ள இந்நிலையில் அவ்வறியாமையிற் சிக்கிய மக்கள் இவ்வுலக சுகத்தை அடையாமல் உணவு தேடுவதே தொழிலாக இருந்து இன்பம் என்பதே இன்னது என்று விளங்காமல் உண்பதும் உறங்குவதுமே சுகமென்ற நிலையில் வாழ்கின்றனர்.

இப்படியலைந்தும் ஓய்வு நேரத்திலாவது இன்பந்துய்க்கும் கவலையற்ற சக்தியை எண்ணிப் பார்க்காமல் தவிக்கும் மக்கள் நிறைந்துவிட்டனரே என்று இயற்கையன்னையானவள் எல்லோ

யையும் இன்பத்திலாழ்த்தி மகிழ்விக்கக்கருதி கல்வி வடிவாகி அறிவென்னும் அமிழ்தை ஒவ்வொருவர் உள்ளந்தோறும் நிரப்பக் காதல் சக்தியைக் கொண்டு புறப்பட்டுள்ளார்.

காதல் சக்தி எல்லா உயிர்களையும் கட்டிப்பிடித்து கலந்துறவாடும் ஆற்றலை உடையது. பேச்சளவோடு மாத்திரமல்ல, உடலளவோடு மாத்திரமல்ல உள்ளத்தளவும் கலந்து ஒன்றுபடும் திறமை காதலுக்குண்டு.

ஒரு பெண்ணும் ஒரு ஆணும் கூடிக்களிப்பதுதான் காதல் என்று நினைக்கிறார்கள், இப்படிப்பட்ட எண்ணத்தில் பலர் நின்று விட்டபடியால்தான், காதலின் சக்தியை அடைய முடியாமல் காமத்தளவு நின்று விட்டவராகிவிட்டார்கள்.

காதல், ஒரு பெண்ணை மாத்திரம் காக்கும் அவ்வளவு சிறிய சக்தியை உடையதல்ல, காதலிடம் பரந்த எண்ணமுள்ள கடவுள் சக்தியுமுண்டு.

எந்நிலையையும் நடத்திக்காட்டி வெற்றியடையும் ஆற்றல் காதலுக்கு இயல்பாகவே அமைந்துள்ளது.

காதல் என்று சொல்லுவது எளிது, அந்நிலையை உணர வெகு நுட்பம் தேவை. எழுதிக் காட்டியே காதலை விளக்கலாமென்றாலும் அந்நிலை உள்ளத்துள் உணர்ச்சியுள்ள காதற் சக்தியை முழுதும் காட்டாதென்றும், முழு காதற் சக்தியை ஒருவர் உணரவேண்டுமானால் இயற்கையின் நிகழ்ச்சிகள் அத்தனையும் நன்கு விளங்கவேண்டி இருப்பதால், பரந்த சிந்தனை சக்தியால் ஒவ்வொரு உயிரிடத்தும் நிறைந்த உள்ளத்தின் அடிப்படையை அறிய தவமிருந்தே ஆக வேண்டியிருக்கிறது.

அத்தவமிருந்து, உடல் நிலையும் அறிவு நிலையும் பக்குவப்படும் பருவந்தான் இல்வாழ்க்கை நடத்த பருவமடைந்து விட்டார்கள் என்னும் குமரி குமர பருவமாகும்.

அறிவு, காதல் நிலையை அறியாமல் உடற்காதலோடு வாழும் இல்வாழ்க்கை, மிருக வாழ்க்கையாகத்தான் முடியும். /

அறிவுக் காதற் சக்தியானது, ஒருவரோடொருவர் கட்டுப்பட்டு வாழச்செய்து அடங்காத உள்ளங்களையும் அடக்கி, ஒடுங்காத மனத்தினையும் ஒடுக்கி, மற்றவர் மதிக்க உயர்ந்து வாழவேண்டுமென்ற மானத்தை யூட்டி, மக்களுக்கு மக்கள் மதிக்க வாழ்ந்தும், மனைக்கு மனை ஓங்கி வளர்ந்தும், நாட்டிற்கு நாடு நாகரீகமடைந்தும், சிறந்து வாழ ஆக்கங்கொடுப்பது காதல் என்ற வீரச் சக்தியே யாகும்.

குழந்தைகளை படிக்கவைத்து சிறக்கச் செய்யவேண்டுமென்பது காதல்.

மற்ற ஊர்களைவிட நம் ஊரில் பல காட்சிகள் அமைத்து புகழ் சிறக்கவேண்டுமென்பது காதல்.

மற்றைய நாட்டைவிட நம் நாட்டில் மக்கள் நற்றொழில் செய்து இன்பமாக வாழவேண்டுமென்று செயலாற்றுவது காதல்.

மற்றொருவர் உள்ளத்தோடு நம் உள்ளம் கலந்து உறவாடும் காதல் சக்தியை அடைந்தோர்களே சித்தர்கள், முனிவர்கள்.

மற்றவர் உள்ளத்தோடு கலந்து உறவாடி அவர்களை நம் வயப்படுத்தும் சக்திகளைப் பெற்றவர்களே ஞானிகள், துறவிகள் ஆகும். ஒவ்வொருவர் உள்ளத்திலும் உள்ளதை உணரும் காதல் சக்தியை எண்ணியபடி நடத்துவிக்கும் ஆற்றல் மிக்கோர்களே மகாத்துமாக்கள், பிரம்ம ஞானிகள் (வேதாந்திகள்) எனப்படும்.

மக்களின் உள்ளத்தை யறிந்து உள்ளத்தோடு உள்ளமாய் கலக்கும்போது உடலே தோன்றாது உலகமும் தோன்றாது. எல்லாமாயும் எங்குமாயும் நிறைந்த கடவுள் நிலை அது என்று அறிஞர்கள் கூறுவர்.

முக்காலமும் அங்கு விளங்கும். பிறர் உள்ளத்தில் நுழைந்து கூடுவிட்டு கூடு பாயும் தன்மையில் பிறர் நன்மை துன்மைகளை உள்ளபடி அறிந்து மக்களின் தீங்குகளை நீக்கி நன்மைகளைச் செய்வதே நம் நாட்டு பண்டைய அரசியல் முறையாகும்.

ஒவ்வொரு அரசர்களும் அமைச்சர்களும் இப்படிப்பட்ட வீரக்காதல் சக்திகளைப் பெற்று சுதந்திர அரசாங்கம் நடத்தியிருப்பதை சரித்திரத்தில் கண்டறிகிறோம்.

அவ்வித அரசர்கள் தம் அரசாங்கத்தில் முனிவர்களையும் ஞானிகளையும் துறவிகளையும் ஆட்சியில் பிணைத்து, ஆலோசனையில் கலந்து, முறைதவறுதபடி நடந்தார்கள் என்பதும் சரித்திரத்தின் குறிக்கோளாகும். இம்மாதிரி வீரக்காதல் சக்திக்கு ஈடு இவ்வுலகில் வேறெதுவும் கிடையாது. இவ்வுலகமும் அதற்கீடாகாது. ஆகையால்தான் ஒரு நாட்டையே ஆளும் அரசனும் அறிஞனை வணங்கி வந்துள்ளனர்.

இவ்வளவு அருள் சக்தியை தன்னகத்தே கொண்ட காதலை தவங்கிடந்தாவது நம் மக்கள் அடையவேண்டுமென்ற பேரெண்ணமே வள்ளுவர் உள்ளமாகும்.

உலக மக்கள் உள்ளந்தோறும் நுழைந்து நுழைந்து அலசிப் பார்த்து ஒவ்வொருவர் உள்ளத்தின் எண்ணத்திற்கும்.

உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின் — என்றும்
எண்ணியவெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின் — என்றும்

வழிகூறி வைத்துள்ளார், என்னே! திருவள்ளுவர் மக்கள் மேல் வைத்த அருங்காதல்.

எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற்
பழிகாணேன் கண்டவிடத்து [கொண்கன்

கணவனைக் காணுதபோது அவர்மேல் பல குற்றங்களைக் கற்பித்து, வந்தால் கேட்போம் என்ற மனைவிக்கு கணவன் வந்ததும் அக் குறைகளே தோணுமல் மறைந்துவிட்டன. அது எதுபோலுள்ள தெனின் எழுதும்போது தான் பிடித்துள்ள. எழுதுகோல் தமக்குத் தெரியாதிருப்பதைப் போல் என்கிருர். இங்கு ஓர் அறிஞனின் ஊக்கமான காதலும், ஓர் மனையாளின் காதலும் ஒன்றுபட்ட நிலையை உடையதாக இருப்பதை யுணர்க.

கண்களவு கொள்ளும் சிறு நோக்கம் காமத்தின்
செம்பாக மன்று பெரிது.

பிறர் உள்ளத்திலிருப்பதை கண்ணிஞல் குறிப்பாக நோக்கி உணரும் சக்தி காமத்தளவு பயன்படுத்தும் அவ்வளவு சிறியதல்ல மற்றெல்லாவற்றிலும் பெரிது.

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலர் கண்ணே உள

ஒன்றை குறிப்பிட்டு பார்ப்பதுபோல் இல்லாமல், பரந்த நோக்க மாகப் பார்த்துக்கொண்டே தாம் கருதியதையுங் காணும் சக்தி காதலர்களுக்குத்தான் உண்டு.

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னேவென் கண்

(காதலரின் உள்ளத்துள் நுழையும் சக்தியை அடையாமல் அவ் வாற்றலுக்காகத் தவங்கிடக்கும் காதலி கூறுகிருள்)

காதலரை நினைந்து நினைந்து அந்நினைவின் கொதிப்பால் பொங்கி எழுந்த நீர், கண்ணுகிய குளத்தில் நிரைந்துத் ததும்பவும் அந்நீரில் விழியாகிய நான் இங்குமங்கும் நீந்தி நீந்தி சலிக்கவுமான இந்நிலை, காதலருள்ளத்தில் நுழையும் காதல் சக்தியை அடைந்தா லன்றி இவ்வல்லல் என்னைவிட்டு நீங்காது.

கண்ணுள்ளிற் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியராங் காத லவர்

என் காதலர் என் கண்ணிலேயே வந்து தங்குவதையறிந்து நானும் கண்ணிலேயே வந்து தங்கி இமை யென்னும் கதவை மூடினேன் அவர் அதற்காக வருத்தப்படவில்லை. நான் எவ்வளவு நுண்ணிய காதலறிவைப் பெற்றிருக்கிறேனோ அதே மாதிரி என் காதலரும் நல்ல நுண்ணறிவைப் பெற்றிருக்கிறார்.

இவைகள் வள்ளுவர் திருக்குறளின் காதல் ஊற்றுகள்.

இப்படிப்பட்ட காதலறிவு உள்ளத்தே பொருந்தினவரே கடவுள் நிலையையு மடைந்தவராகிறார்கள்.

ஆகவே காதல் நூல்களைப் படிக்கும்போது பரந்த கண் கொண்டு விரிந்த எண்ணமுடன் படிக்கவேண்டும். படிக்கும்போதே அக்காட்சிகளை உள்ளத்தில் சித்தரித்தோ அல்லது அம்மாதிரியான இயற்கையிடம் காலங்களைப் பார்த்திருப்பதை எண்ணியோ மகிழ்ந்துக் கொண்டே படிக்கவேண்டும்.

உலகத்தையே தன்னுள் அடக்கப்பட்டு கடவுள் நிலையையும் காட்டவல்ல அப்பெருங் காதல் சக்தியை கட்டாயம் அடைய வேண்டிய நிலை இப்போது ஏற்பட்டுவிட்டபடியால் காதல் என்பது எது ?

காதலானது இன்பத்திலாழ்ந்து காலங்கழித்தாலும் கழிக்கும். அதைவிட்டு இன்பமுடிவை அடையவேண்டுமென்று எழுந்தாலும் எழும். அப்படி எழும் சக்தி இவ்வுலகத்தையும் பொருட்படுத்தாது. தனக்கு நிகரென எதையும் கருதாது, கண் காது மூக்கு நாக்கு உணர்வுகூட அவ்வெழுச்சி முன் நிற்க சக்தியற்றுவிடும்.

அன்பு நட்பு வாய்மை ஒழுக்கம் இன்பம் இவ்வைந்தும் காதலுக்குப் படைகள் ஆகும்.

எதிர்ப்போரின் சக்தியை இழுத்துக்கொள்ளும் வசிய சக்தி காதலிடம் உண்டு.

ஆதலால் காதல் என்ற சொல்லை உடைத்து அதனுள் அறிஞர்கள் எப்பொருளை வைத்து சொல்லாக உருட்டி உள்ளனர் என ஆராய்வோம்.

காதல் = காது × அல்

காது—கொலை, பகை, பிரிதல், பிளவு

அல்—இல்லாதது, அல்லாதது

கொலையில்லாதது, பகையில்லாதது, பிரிதலில்லாதது, பிளவில்லாதது என்பதே காதல் என்பதாயிற்று.

இப்போது காதலின் சக்தி ஒருவரையொருவர் நட்புகொண்டு பிரிக்க முடியாதபடி பிணைக்கப்பட்டு நிறையின்பத்துடன் வாழும் நிலையே காதல் என்ற முடிவுக்கு வர முடிந்தது.

காதலுக்கு வேறு வேறான உரைகொண்டு மாறான செயலில் மனதை செலுத்தி துன்பம் உண்டுபண்ணிக்கொள்பவர்கள் காதலை உணர்ந்தவர்களல்ல என்பதே துணிவு.

பழத்தில் இனிப்பு காதல்

அது உயிர்களைக் கூவி பக்கம் இழுத்து உண்ணச்செய்கிறது.

பூவில் மணம் காதல்

அது உயிர்களை இழுத்து பக்கம் சேர்த்து தழுவிப்பிடித்துத் தலைமேலும் வைத்துக்கொள்ளச் செய்கிறது.

சந்தனத்தில் மணம் காதல்

அதனை வாரி வாரி உடலெல்லாம் பூசச்செய்கிறது.

நாயின் நன்றி காதல்

அக்காதல் நாயைத்தூக்கி மடியில் வைத்து முத்தமிடச் செய்கிறது, இப்படியாக ஒவ்வொரு பொருளிடத்தும் காதல்கள் இருந்து மக்களைச் சேர்ந்து இன்பமடைகின்றன.

இத்துணை வகைகளால் காதல்கள் காட்சியளிக்கும் இவ்வுலகத்திலே அக்காட்சிகளைக்கண்ட நேரம் போக ஒய்வு நேரங்களில் அவ்வின்பங்கள் யாவும் திரண்ட நம் மனையாளை நோக்குகிறோம்.

உலகில் கண்ட காட்சிகள் யாவும் அவளிடம் உள்ளதை காணும்போது மட்டற்ற மகிழ்ச்சி கட்டுக்கடங்காத பூரிப்பு உண்டாகிறது. தான் தன் தலைவனாகிய கடவுளை இரண்டறக் கலந்த மாதிரியான பேரின்பம் தன்னை நிரப்புகிறது. இப்படிப்பட்ட வாழ்க்கைதான் இல்வாழ்க்கை, இதற்குதான் இல்லறம் என்று பெயர். இந்நிலையை (அறிவற்ற மனையாளோடோ! பொருத்தமற்ற உள்ளத்தினையுடையாளோடோ! கல்வியறிவோ பரந்த எண்ணமோ இல்லாத மனையாளோடோ! அன்புடன் நட்புகொண்டு உள்ளத்தோடு ஒத்துழைக்கத் தெரியாத மனையாளோடோ! பகை பிளவு சூது என்ற குணத்தால் வெறுப்புக்கொண்ட மனையாளோடோ! வாழ்ந்து சீர்கெட்ட வாழ்க்கையை இத்துடன் இணைத்துப்பார்த்து மனதை கெடுத்துக்கொள்ளக்கூடாது.

பெரும்பாலும் பெண்களை நம் நாட்டில் அறிவியக்கத்தில் பழக்காமல் வீட்டு வேலையிலேயே உணவு செய்யும் யந்திரமகா வைத்து அறிவு போன்ற குணங்களை முடமாக்கிவிட்டோம்.

போனது போகட்டும் இனியாவது பெண்களைத் தன்னோடு எங்கும் அழைத்துச் சென்று பரந்த எண்ணங்களையும் இயற்கையின் அழகுகளையும் எடுத்து விளக்கி அறிஞராக்கிக்கொள்ளவேண்டும்.

அப்படிச்செய்து மனையாளை வாழ்க்கைத் துணைவி ஆக்கிக் கொண்டால் அவள் யார் தெரியுமா? அவளின் சக்தியைப் பார்த்திருக்கிறாயா?

இந்தியத்தாய், பாரதமாதா, தமிழ்த்தாய், என்கிறோமே அச்சக்திகளை பெண்களிடம் காணலாம்.

உலகில் காணும் ஆண் பெண் யாவருக்கும் பிறப்பிடம் எங்கு தெரியுமா? பெண்களிடம் உற்பத்தியில்லையானல் உலகில்மக்களேது. அவர்கள் மனம் பூர்ண மகிழ்ச்சியோடு இருந்தால் எல்லா அழகும் குணமும் நிறைந்த குழந்தைகளைப் பெறுவார்கள். அவர்கள் உள்ளத்தில் எக்குணம் குறைவுபட்டு விளங்குகின்றதோ அந்தக்குறைவு குழந்தையைத் தொடரும்.

நல்ல அறிவோடு பிறப்பித்ததற்காகவே அறிஞர்கள் தாய் தந்தைகளை வணங்குகிறார்கள்.

இப்போது எல்லா வடிவங்களிலும் காதல் குணம் நிறைந்து அதிகம் குறைவுக்குத்தக்க அழகும் குணமும் வடிவும் பொருந்தி உலகம் நிகழ்கிறதென்ற உண்மையைக் கண்டோம்.

காதலின் முதிர்ச்சி வடிவே அன்பு
காதலின் முடிவு நிலையே நட்பு
காதலின் எல்லை கடந்ததே பேரின்பவீடு

இப்படி, எல்லாமாயும் எங்குமாயும் நிறைந்து, எல்லோரையும் ஒன்றுபடச் சேர்த்து, இன்பமே தனது குறிக்கோளாக நிலை நிற்கும் காதல் சக்திகளை நுட்பமாக அறிந்துக்கொள்ளும் நிலையில் நூல்களைப் படிக்கவேண்டும்.

# சமத்துவக்கலை.

சமத்துவக்கலைகள், எல்லா நூல்களுள்ளும் கலந்து வந்திக் கொண்டே இருக்கும்.

ஒவ்வொரு நூலாசிரியரின் கருத்தும், நாட்டை ஆளும் அரசியலின் கருத்தும், ஒவ்வொரு இயக்கத்தலைவர்களின் கருத்தும் பக்தர்கள், அடியார்கள், தொண்டர்கள் போன்ற பொதுச் செயலாளர்களின் எண்ணமும் சமத்துவத்தையே அடிப்படையாகக் கொண்டனவாயிருக்கும்.

சமத்துவம் என்பது, ஒன்றுபட்டத்தன்மை, பிளவுக்கு இடமில்லாத நிலை என்பது பொருள்.

சமத்துவ எண்ணமுடையவர்கள் பிறரைத் தாழ்த்திப் பேசுவதோ, தாழ்த்திப்பேசுவதைக் கேட்பதோ, அடிமை வாழ்க்கையைப் பார்ப்பதோ முடியாத செயலாகும்.

யார் யார் எப்படி நினைப்பதாயிருந்தாலும் தாழ்ந்தவர்களை உயர்த்துவதற்காகவோ உடன் சேர்த்துக்கொள்வதற்காகவோ சமத்துவ எண்ணமுடையோர் தயங்குவதில்லை. தனித்த மனிதரால் செய்ய முடியாத செயல்களைக் கூட்டுறவு சக்தியால் சமத்துவப் படுத்தி அரிய செயல்களைச் செய்ய முன் வந்த சமத்துவக்கூட்டங்களேதான் மதம், சமயம், என்ற பெயரால் விளங்குவதாகும்.

அப்படித்தோன்றிய மதங்களாலும் சமயங்களாலும், எழுதப் பட்ட நூல்களைப் படித்தால், அதில் சமத்துவத்தை அடிப்படையாகக்கொண்டே நீதிகளை விளக்கக் காணலாம்.

சைவ சமயத்தில் தேவாரமும், வைணவ சமயத்தில் திருவாய்மொழியும், மிகச்சிறந்தன. அதே மாதிரி சைவத்திற்கு பெரிய புராணமும், வைணவத்திற்கு பாகவதமும் மிகச்சிறந்த நூல்களாகும்.

இதேமாதிரி புத்தர்களுக்கு திரிபுடமும், கிரிஸ்துவர்களுக்கு பைபிளும், மகமதியர்களுக்கு குர்ஆனும் மதங்களின் சட்ட நூல்களாகும்.

இம்மத நூல்கள் எல்லாவற்றிலும் பொது நீதிகள் ஒரே மாதிரிதான் உள்ளன. பொய், சூது, வஞ்சம், பிறர் மனையாளை

கெடுத்தல், திருடல், கள், புலால், கர்வம், பொறாமை போன்ற தீச்செயல்களை எந்த மதமும் கண்டிக்கத்தான் செய்கிறது.

அன்பு, ஒழுக்கம், ஒற்றுமை, இரக்கம், ஈகை, முதலிய குணங்களை ஒவ்வொரு மதங்களும் பழக்கத்தான் செய்கிறது. கடவுள் ஒன்றுதான், அவர் எல்லாவிடத்தும் இருக்கிறார். அவர் இல்லாத இடமே கிடையாது. அவரால்தான் உலகம் நிகழ்கிறது என்பதில் எந்த மதத்திற்கும் மாறுபாடே கிடையாது.

இப்படிப்பட்ட மதங்களை நடத்தும் பிற்காலத் தலைவர்கள் மாத்திரம், தங்கள்போன்ற அறிஞர்களையும் வேறு மதம் என்ற பிடிவாதக்குணத்தினைக் கொண்டு பிறராக, வேறாக, அன்னியராக பிரித்துப் பேசும் தன்மையை வளர்க்கிறார்கள். அதனால் அறிஞர்களாக உள்ளவர்களிடையில் ஒன்றுபட்ட சமத்துவம் விளங்காமல் தன்னுடன் சேர்ந்தவர்மட்டிலும் சமத்துவத்தைக் காட்டிக்கொள்வதே ஒரு பழக்கமாக நிலவுகிறது.

ஆனால் அந்தந்த மத நூல்களில் அப்படிப் பிரித்து வாழக் கூறவில்லை.

ஒவ்வொரு மதமும் தங்கள் கடவுளை, உலகத்தையே படைத்த இறைவன் என்பதில் இளைத்திருக்கவில்லை. ஆனால் தங்கள் மதத்திற்கு புறம்பானவர்களையும் நம் கடவுள்தானே ஆக்கியிருத்தல் வேண்டும் என்றோ, அவ்வவர்களின் மதக்கடவுள் அவரவர்களை மட்டிலும் ஆக்கியிருப்பதாயின் நம் கடவுள் சிறிய பகுதியை உண்டாக்கியவர்தானே ஆவார்; என்ற எண்ணமே உதிப்பதில்லை. அதோடு விடாமல் மற்ற மதக்கடவுள் பொய் என்றும், கற்பனை என்றுங் கூடக் கூறுகிறார்கள். அப்படிக் கூறுவது உண்மையறிந்து கூறுவதாயின், எல்லோரையும் நம் கடவுள்தான் உற்பத்தி செய்திருப்பர் என்று நம்பி யாவரையும் போற்றுதலை முதற்கடமையாகக் கொண்டிருத்தல் வேண்டும்,

பகை நட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன்
தகைமைக்கட் டங்கிற் றுலகு

என்பது வள்ளுவர் பொதுமறை.

அதாவது பகையுடையாரையும் தீங்கு செய்யாமல், நட்புடன் காப்பதே உலகம் மதிக்கும் பண்பு குணம் அமையப்பட்டவர்களின் தன்மையாகும். அப்படி எம்மதத்தினராவது நடப்பதாகத் தெரியவில்லை. சைவத்தை மேற்கொண்டோர் மேடையில் பாடும்போது ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாமே எனக் கூறுவார். தன்னுடன் கற்று தனக்குத் துணைவரான தோழனையும் தாழ்ந்த சமூகத்தானென்பதற்காக வீட்டிலோ மற்றைய விடத்திலோ புறக்கணிப்பதோடு உண்ணும்போதும் புறத்திலிருத்தி உண்பார்கள். இந்நிலை ஒவ்வொரு மதத்திலும் காணலாம். தன்னோடு சேர்ந்துவிட்டால் நல்லவன், தனக்கு புறம்பாக உள்ளவர் எவ்வளவு நீதியில் வாழ்ந்தாலும் அஞ்ஞானி, துன்மார்க்கன், தாழ்ந்தோன் என்பதே ஒவ்வொரு மதத்தின் முடிபாக இருந்து வருகிறது.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தோர்

தாம் அடைந்த இன்பமான நிலையை, எல்லோரும் அடையவேண்டுமென்று ஆசைகொண்டு, அதற்கான வழி செய்வோர்களே கற்றறிந்தோர் என்பது வள்ளுவர் திட்டம். அப்படி சமத்துவ எண்ணமுடன் மதத்தலைவர்கள் நடந்து வந்திருந்தால், மதத்தில் ஆள் சேர்க்கும் தொழிலை விட்டு விட்டு, தம்மிடம் சேர்ந்தவர்களுக்கு உணவு, உடை, தொழில், இன்பம் முதலியவைகள் குறைவர கிடைத்தற்கு வழி செய்திருந்திருப்பர்.

இப்போது கற்றவர்கள்போல் மற்றையோர் யாவரும் இன்பமடையும்படி செய்ய முடியாமல், தம் மதத்தினரை பிற மதத்தினரிடம் போய் இரந்துண்டு வாழ விட்டுவிட்டு, தம் மதத்தின் சிறப்பை தலைக்குமேல் புகழுவதென்பது மானங்கெட்ட நிலை என்பதை சிந்தித்தோர் அறிவர்.

ஒரு நாட்டில் எவ்வகையிலாவது, எக்கொள்கையினிடத்தாரோடு பழகியாவது கற்றறிந்தார் என்போர்களே நாட்டை நடத்தும் தலைவர்கள், (வழிகாட்டிகள்) ஆவார்கள். அவர்கள் வகுத்த வழியில் நடப்பதே பெரும்பான்மையான மக்களின் செயலாகும். அப்படிப்பட்ட உயர்ந்த வழியமைக்கும் நிலையிலுள்ள அறிஞர்கள் நீதிக்கு மாறாக சுயநல சூழ்ச்சிக்காக மக்களுக்குள் பிளவை உண்டு பண்ணும் திட்டங்களை நுழைத்து விடுவது, நாட்டைக்கெடுக்கும் இழி தன்மையாகும். அப்படியில்லாமல் உண்மையை உள்ளபடிக்கூறி, கூறியபடி தான் நடந்து காட்டி, மக்களை உயர்ந்த சமத்துவமாக்கும் அறிஞர்களின் கால் வழிகளை (கால் வழி—ஒருவருக்குப்பின், தொடரும் வழிகளை வணங்குதல்—அவரின் வழியைப் பின் பற்றல்) மற்றையோர் பின்பற்றி நடப்பதோடு அந்த அறிஞர்களின் நடத்தைக்கு ஊன்றுதலான கால்களைக் கும்பிட்டதாகும்.

அப்படிப்பட்ட அறிஞர்கள் சிலர் அந்நிலையிலிருந்து தவறி நடுநிலைமையுடன் நடவாதபடி சுய நலத்திற்காக தவறு செய்த பழிதான் இன்றைக்கு மக்களுக்குள் தாழ்வு, உயர்வு, மதவாதம், சமயவாதம், என்பனவாகும். இவ்வாதத்தால்தான் சமத்துவத்திற்கு இடையூறு வந்து இன்றைய அறிஞர்களையும் அறியாமையாக்கிற்று. கடவுள்களில் கலகங்கள் விளைந்தன. சூது, வஞ்சம், மோசம், லஞ்சம், திருடு இவைகள் வாழ்க்கையாகவும்; இவைகளைப்பழக முடியாதவன் ஏழை, தாழ்ந்தவன், அறியாமையுடையவனாகவும்; நிலவலாயிற்று. ஆனால் அறிவு நிறைந்த புலவர்கள் எப்படியிருக்க வேண்டும்

உவப்பத் தலைகூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்

தன்னிடம் சேர்ந்த எல்லாருடைய உள்ளமும் மகிழுமாறு ஒன்றுபட்டு வாழும் நிலையே புலவர்களின் தன்மையாகும்

தன்குற்றம் நீக்கி பிறர்குற்றங் காண்கிற்பின்
என்குற்ற மாகு மிறைக்கு

தன்னிடத்திலே குற்றம் நடவாதபடி முதலிலே பார்த்துக்கொண்டு பிறகு பிறர் குற்றத்தை நீக்கக் கருதினால் அத்தலைவர் மீது எக் குறையும் காணப்படமாட்டாது.

இப்படி நூல்களில் வரும் சமத்துவங்களைத் தெரிந்துப் படிக்க வேண்டும்.

படித்தவர்களின் மனதில் உள்ள அன்பில்லாத சமத்துவக் குறையென்ற மாசுதானே, நம் நாட்டு பழங்கால நூல்கள் மீதெல் லாம் படிந்துவிடச்செய்தது. உள்ளத்தால் உண்மைகளை நடத்தி, உயிரையும் கொடுத்தத் தியாகிகளின் தொண்டு, இன்றைய அறியா மைப்படிப்பாளிகளின் குப்பைகளால் மறையவுமான நிலை சமத்து வக்குறை ஒன்றால்தானே நிலவின.

எவ்வளவு கற்றவரெனினும் உண்மையை தாராளமாய்க்கூறு வதில் சபைக்கஞ்சி, செயலுக்கஞ்சி, பேடிகைவாள் மாதிரி துணி வற்றவரிடம் கல்வி சிக்கியன்றோ நம் தமிழ் நூல்கள் மங்கி உள்ளன. உலக மக்கள் யாவரும் படித்து இன்பமடையும் இயற்கையொலி வடிவான நம் தமிழின் சமத்துவ இயல்பையும், எங்குமாய் எல்லா மாய் நிறைந்த தமிழர்களின் தெய்வத்தன்மையையும், கண்டு கலந்து வாழும் நாம் எல்லோரிடத்துமே பேதமின்றி நட்புகொண்டு வாழ வேண்டும். சமத்துவத்தை அடிப்படையாகக்கொண்ட சைவர்கள் தங்கள் நூலின்படி திருநீறு பூசியோரையெல்லாம் தங்களுடன் சமத் துவமாகச் சேர்த்துக்கொள்வதில்லை. சமத்துவத்திற்காகவே தோன்றிய வைணவர்கள் தங்கள் நூல் விதிப்படி திருநாமம் வைத் தவர்களையெல்லாம் ஒன்றாகவே சேர்த்துக்கொள்ளுவதில்லை.

அன்பை நடத்தையிற் காட்டிய அன்பர் ஏசுநாதரின் பெயரால் ஏற்பட்ட கிருஸ்து மதமும் தங்களுக்குள் பல வகுப்பு உயர்வு தாழ்வு வைத்துக்கொண்டு பிளவோடுதான் இருக்கின்றது. சமத்துவ ஒற் றுமையை நிலைநாட்ட வந்த மகமது நபிகளின் மதம் மற்றவன் பட்டினி இருப்பதைப் பார்த்து இராதே வட்டி வாங்காதே கள்

சாப்பிடாதே என்று கதறுவதை மறந்து தன் வயிறு நிறைந்தால் போதும் என்று ஒருவரை ஒருவர் வஞ்சிப்பதும், பிறரை ஒன்று படுத்தும் தன்மையை மறந்து பகைத்தல் எதிர்த்தல் போன்ற குணத்தை வளர்த்து வருகிறது.

இப்படியெல்லாம் பார்க்கும்போது சமத்துவத்தை நிலை நாட்ட வந்த மதங்களெல்லாம் இன்று தனித்தனியாக நின்று ஒன்றிற் கொன்று பிரிந்து நிற்கும் தன்மையையும், இம்மதங்கள் பிறவாத காலத்தில் உள்ள மக்கள் நிலையான நீதிகளால் உள்ள இன்பத்தை யும், ஆழ்ந்து சிந்தித்துப்படிக்கவேண்டும்.

இன்றைய நிலையில், மக்களைச் சமத்துவப் படுத்தத் தோன்றி யுள்ள மகாத்மா காந்தி அவர்கள், தாழ்ந்தோர்கள் முன்னுக்கு வருவதே (தீண்டாமை என்பது நீங்குவதே) எனது முதற்பணி என்கிறார், ஆனால் அவர் வழி நடக்கும் நாம் அதை நடத்திக்காட்ட பின் வாங்குகிறோம். இப்படியேதான் நமது நாட்டில் சமத்துவப் போராட்டம் வெற்றியடையாமல் காலங்கடத்துகின்றன.

இதனைத் திருவள்ளுவர் நன்றாக விளக்கி இருக்கிறார். தாழ்ந் தோர்கள் யார்,

> ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
> இழிந்த பிறப்பாய் விடும்.

அதாவது மக்களில் தாழ்ந்தவர்கள் என்று ஒரு சாரார் கிடையாது. குடும்பத்தை ஒழுக்கமோடு நடத்துவதால் உயர்வும், உயர்ந்த நிலை களை, வழக்கிலிருந்து தவறி விட்டு விடுவதால், சீர்கெட்டு பொலிவு குறைந்து, உணவு உடை, நட்பு, குணம் யாவும் தாழ்ந்து, இழிந்தவ ராகவே காணப்படுவதோடு, அவர் வழி பிறக்கும் குழந்தைகளுக் கும் அத்தாழ்வு பழக்கப்படலால் பிறப்பிலேயே ஊறிவிடும், என்று வள்ளுவர் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

ஆதலால் சமத்துவத்திற்கு தீங்கிழைக்கும் வழிகளையறிந்து, கற்றோர்கள் முன் நடந்து, கல்லாதவருக்கும் விளக்கி வைத்து, நாடு

சிறக்கும் வகையில் நூல்களில் வரும் சமத்துவப்பகுதிகளை விளக்கமாகப் படிக்கவேண்டும்.

ஆனல் இப்படிப்பட்ட சமத்துவ நிலைகளை உண்மையாகச் சொல்லாமல் மக்களைக் கெடுத்து, மக்களைப் பிளவு படுத்தி, மக்களிடம் பொய்க் கற்பனைகளைக் கூறி, ஏமாற்றிப்பணம் பறிக்கும் கயவர்கள் ஒரு கூட்டம் உண்டு. அவர்களும் மக்களைப் போலவேதான் இருப்பார்கள். கையும் காலும் தலையும் மற்ற உறுப்புகளும் பார்ப்பதற்கு மனிதர் மாதிரியேதான் இருக்கும். அவர்களைக்கயவர் என்ற பெயரால் அழைக்கப்படல்வேண்டும் அவர்களைத் தெரிந்துக் கொள்ளவேண்டுமானல் அவர்கள் தனக்கென்றே சேகரிப்பார், தாம் விரும்பியப்பொருளை தான் அடையவே செயலாற்றுவார். பிறர் பிழைக்கவேண்டுமென்ற எண்ணமே அவரிடம் இருக்காது. இதைக் கொண்டுதான் அவர்களைத் தெரிந்துக்கொள்ளவேண்டும் என்று வள்ளுவர் விளக்குகிறார்.

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்

அதோடு மட்டிலுமா அக்கயவர்கள் மக்கள் கூட்டத்திலே தேவர்களைப்போல் சடைமுடி உருத்திராக்கம் விபூதி காவி போன்ற வேடங்களுடனும் இருப்பார்கள். அவ்வேடதாரிகளின் எண்ணம் மட்டிலும் தாம் நினைத்த விருப்பத்தைப் பூர்த்தி செய்துக்கொள்ள யாரையும் எவ்வித கெடுதலுக்கும் ஆளாக்கிவிடுவார்கள். பிறர் எப்படி கெட்டாலும் கவலைப்படாமல் அது உனது தலை விதி என்று கூறிவிட்டு, அபகரித்தது என் தலைவிதி என்று வாரிகொண்டு போய் விடுவார்கள். இப்படிப்பட்ட தேவர் போன்றூர்களும் கயவரேயாவார்கள் என்பதை

தேவரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்—என்கிறூர்

மக்கள் வாழ்க்கையை அழித்து மக்களுக்குக் கேடு செய்யும் தீய கூட்டம் உள்ளதுபோல் மற்ற உயிர்களில் தாங்கண்டதில்லை

என்கிறார். பறவைகளில் கிளி மாதிரியே வந்து கிளிகளைக் கெடுக்கும் உயிரும், புலி மாதிரியே வந்து புலிகளைக் கொல்லும் உயிர்களும் இதுமாதிரி வேறு உயிர்களில் இல்லை என்பதற்கே அவரன்ன வொப்பாரியாங்கண்டதில் என்று சமத்துவத் தடையை உடைத்திருப்பதைத் தெரிந்துப் படிக்கவேண்டும்.

# நாட்டு நிலையின் கலை.

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேராதியல்வது நாடு (குறள்)

என்றபடி பார்க்கும்போது நாட்டு நிலையுடன் கூடி வாழ்வோரே அறிவுடையார் ஆவதால், நாட்டு நிலை என்பது இன்றைய நிலையையா பண்டைய நிலையையா என்ற ஐயம் தடுப்பதால் இரண்டையும் ஆராயவேண்டிய நிலை எற்படுகிறது.

## பண்டைய நிலை

அன்றைய அறிஞர்கள் ஒவ்வொரு பொருள்களின் குணங்களையும் கண்டு அவைகளுக்கு வைத்துள்ள இடுகுறிப் பெயர் காரணப் பெயர்களில் இதுவரை மாற்றமே கிடையாது.

அன்றைக்கு ஒவ்வொரு பொருளும் இன்னின்னதற்கு உதவும் என்ற குணத்திலும் வேறுபாடு கிடையாது.

இன்னின்னது உணவுகள், இன்னின்னது கருவிக்கானவைகள், இன்னின்னவைகளோடு இன்னின்னது சேர்ந்தால் இன்னின்னவைகள் ஆகும், என்ற வகைகளில் மாற்றமெதுவும் இல்லை.

கட்டடங்கள் கட்ட வழி வகுத்ததும், உடைகள் தயாரிக்க முறைகள் கண்டதும், அழகு படுத்துவதற்கான முறைகள் வகுத்ததிலும் தவறு இருந்ததாகத் தெரியவில்லை.

உடல் என்ற வடிவுப்பொருளை ஆவி என்ற உயிர் ஆட்டவல்லது என்றபடியே இன்றைக்கு பல இயந்திரங்களை ஆவி ஆட்டுவதிலும் வியப்பு ஒன்றுமில்லை.

அன்றைக்கும் மழை இல்லையானால் துன்பப்பட்டார்கள், இன்றைக்கும் மழை இல்லையானால் துன்பப்படுகிறார்கள்.

அரிசி, கோதுமை, கம்பு, சோளம், ராகியையும், கிழங்கு, காய்கள், விதைகள், தழைகள், பூக்கள் முதலிய வகைகளையும் எப்படி செய்து உண்ணவேண்டுமென்றார்களோ அதை ஓரளவும் மாற்ற முடியாமல் உண்டு வருகிறோம்.

மண் இனம், நீர் இனம், நெருப்பினம், காற்றினம், விண்ணினம் என்ற ஐந்தைவிட ஆறாவது இனம் ஒன்று கண்டதாகப் புலனாகவில்லை.

உவர்ப்பு, கார்ப்பு, புளிப்பு, கைப்பு, துவர்ப்பு இனிப்பு என்ற ஆறைவிட ஏழாவதொன்று பிறக்கவில்லை. சூடு, முட்டை, கருப்பை விதை ஆகிய நான்கிடத்தில்தான் உயிர்கள் உற்பத்தியாகின்றன என்பதை விட்டு வேறிடத்தில் உற்பத்தியாவதான பிறப்பு முறையை இன்னும் கண்டதாகத் தெரியவில்லை.

தீவு 7, நதிகள் 7, இசை 7, திக்குகள் 8, தத்துவம் 96, பருவகாலம் 7, கைத்தொழில் 6 (உழவு, உடை, வரைவு வாணிபம், கருவி, சிற்பம்) இவ்வளவிற்கும் முறை தவறாத நூல் விதிகளும் அந்நூல்களுக்கு இலக்கணங்கள் (எழுத்து சொல் பொருள் யாப்பு அணி) அழகுடன் அமைந்ததை விட இப்போது புதிய அழகுகள் ஒன்றும் சேர்க்கப்படவில்லை.

மொள்ளும் பாத்திரங்கள், வாரும் கூடைகள், இழுத்துச்செல்லும் வண்டிகள், அமைத்தது இன்றும் பொருத்தமாகவே உள்ளன.

அப்போது இரும்பினால் செய்த கருவிகளை இப்போதும் இரும்பினால்தான் செய்கிறார்கள்.

செம்பு, பித்தளை, மண், இவைகளால் தண்ணீர் எடுக்க, வைக்க, காய்ச்ச் செய்யும் முறைகளைவிட வேறொன்றால் செய்து விட முடியவில்லை.

தங்கம், வெள்ளி, ரத்தினங்களை அக்காலத்தில் நாணயமாக நகைகளாக பயன்படுத்தினதுபோல் தான், இன்றும் வழங்கப்படுகின்றன.

நடக்கக் காலுக்குச் செருப்பு, உட்கார கால்வைத்த பலகை, படுக்கக்கட்டில், ஆட ஊஞ்சல் இவைகளை சித்திரம் சித்திரமாக அமைத்ததிலிருந்து ஒரு சிறிதும் உயர்ந்தனவாக இன்று செய்துவிடவில்லை.

வெள்ளை, நீலம், சிகப்பு, பச்சை, மஞ்சள் அதனதன் இனங்கள் ஆன ஐந்தைவிட ஆறாவது நிறம் ஒன்று காணப்படவில்லை.

கத்தி, வேல், ஈட்டி, அம்பு, வெடி போன்ற ஆயுதங்களைவிட புதிய ஆயுதம் ஒன்று கண்டுபிடித்ததாகத் தெரியவில்லை.

இப்படியாக நூல்களில் வந்துள்ள ஆதாரங்களைக்கொண்டு விளக்கிப்போனால் நீண்டு விரியும், ஆனால் இதையே காரணமாகக் கொண்டு ஒன்றொன்றையும் ஆராயப்புகுந்தால் ஒவ்வொன்றும் தெளிவாக விளங்கும், அப்போது பண்டைய அறிஞர்கள் கண்ட அனுபவங்களையே இன்றைய மக்கள் வேடம் மாற்றி வேறு பெயர் வைத்துள்ள ஒன்று மாத்திரம்தான் இன்று கண்டதென்பது விளங்கும்.

## இன்றைய நிலை.

ஆர்த்த சபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றாம் புலவர் வார்த்தை பதினாயிரத்தொருவர்—பூத்தமலர். தண்டாமரைத்-திருவே தாதா கோடிக்கொருவர் உண்டாயினுண்டென் றறு.

இதில் அன்று 100-க்கு ஒருவர் கூட்டத்திற்கு வருவார். ஆயிரத்திற்கு ஒருவர் புலவராயிருப்பார். பத்தாயிரத்திற்கு ஒருவர்

கூட்டத்தில் முறையறிந்து பேசுபவராயிருப்பார். கோடிக்கொருவர் தலைவர் (வள்ளல்) இருப்பார், என்று பல ஆண்டுகட்கு முன்பே ஔவைபிராட்டியார் கூறிய நிலையைவிட இன்று எவ்வளவு மடங்கு கல்வியறிவு உயர்ந்திருக்கின்றன.

அன்றைய மக்கள் புலி-சிங்கம்-காடிகளோடு போரிட்டும், ஆபத்தில் 3-4 தோழர்களைத் தூக்கிக்கொண்டு பல மைல்கள் ஓடும் வலிமைப் பெற்றிருந்தார்களே, அதைவிட இப்போது உடல்வலிமை எவ்வளவு உயர்ந்திருக்கிறது. அக்காலத்தில் பெண்கள் தலைசீவி சடைபின்னி அத்தலையான ஆகாயத்தில் சந்திரபிறை-சூரிய நிலை (மீன்கள் போல்) சடையில்லைகளோடு பூக்களை நிரப்பியும். கண்ணாடியால் அழகு பார்த்து பொட்டுமிட்டு சோலைப்புரத்தே மயில்போன்ற சாயலான உடையணிந்து, அன்னம்போல நடை நடந்து, குயில் போன்ற இனிய இசையுடன், கிளிபோல் பேசி, பூ போன்ற பந்துகளால் கூட்டங் கூட்டமாக விளையாடுவார்கள் என்ற பண்டைய நூலின் நிலையை விட இன்றைக்கு எவ்வளவு மடங்கு கால நிலை உயர்ந்திருக்கிறது.

அறுசுவையுண்டி அமர்ந்தில்லாள் படைக்க இன்றைக்கு 100-க்கு எத்தனைபேர் சாப்பிடுகிறார்கள். உப்பு மாத்திரம் சேர்ந்த ஒரு சுவையுடனும், உப்பு-காரம், சேர்ந்த இருசுவையுடனும், உப்பு-காரம்-புளி சேர்ந்த முச்சுவைக்கும் வகையறியாமல் எவ்வளவுபேர் கள் திண்டாடும் நிலை இல்லாமல் இருக்கிறார்கள்.

உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன என்ற விதியறிந்து உண்பவர்கள் இன்றைக்கு எவ்வளவுபேர்கள் இருக்கலாம். அன்று ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொருள்களின் குணம் தெரிந்து நடந்துவந்தும் இன்னின்னதால் இன்னின்ன நோய்வரும், இன்னின்ன தழையால் அந்நோய் தீரும் என்று குணம், குறிப்பு, தெரிந்திருந்ததை விட இன்றைய மக்கள் குணநிலை எவ்வளவு உயர்ந்திருக்கிறது.

பரமன் நடனமாட, கண்ணன் மத்தளம் கொட்ட, பிரமன் இசையொலி கிளப்ப, முனிவர்கள் பின்பாட்டுடன் தாளம் போட்டு

மற்றவர்களுடன் போட்டியிட்டு வெற்றிகாணும் அளவு நடனகலை பரவி இருந்தனவே இப்போது அதன் முறை எவ்வளவு உயர்ந்து பரவி உள்ளன. (பரமன், பிரமன், கண்ணன் போன்றூர்கள் நம் நாட்டு முன்னைய அறிஞர்கள்தான்)

அன்றைய நிலை காட்டு மிராண்டிகள் நிலை, அறிவீனர்கள் மூடப்பழக்கவழக்கத்தால் வாழ்ந்த நிலை, இன்றைய விஞ்ஞான உலகில் ரயிலும் கப்பலும் விமானமும் ரேடியோவும் அதிசயிக்கும் செயல்புரியும் இந்நிலையை யார் மறைக்க மறுக்க முடியுமென்று எழும் எண்ணம் நிரம்பிய செல்வர்கள் நிறைந்த நாடுகளிலே சீரழிந்த குடிகள் தெருக்களிலே குழந்தை குட்டிகளுடன் பிச்சையெடுத்து வாழ்கின்ற அந்நிலையை இன்றைய விஞ்ஞானம் மாற்ற முடிந்ததா?

பரந்த அறிவும், ரேடியோ தந்தி முதலான விரைந்த கருவிகளின் உதவியுங்கொண்டு ஏழைக்கூட்டத்தின் தன்மையை உணர முடிந்ததா?

நம் நாட்டு வீரக் குழந்தைகள் தாய் தகப்பனை தொழிலுக்கனுப்பிவிட்டு ஏங்கித் தவிக்கும் சகிக்கொணு நிலையை தூரவீட்சண்ய கண்ணுடிகளால் காண முடிந்ததா ? எதிர்கால நாட்டுக்கு சுதந்திரத்தை வளர்க்கும் நம் நாட்டுக் குழந்தைகளை அரசாங்கமாவது வளர்த்துவந்ததா ?

இன்றைய தியாகிகள், தொண்டர்கள், வீரர்கள் செயற்கரிய செய்யும் இக்காலத்திலே, மக்களுக்குள் மக்கள் பிளவு, கடவுளில் பிளவு, இடத்தில் பிளவு, தண்ணீரில் பிளவு இப்படிப்பட்டசீர் கெட்ட நிலையை உடனே நீக்கிவிட முடிந்ததா.

நம் நாடு கல்வியில் சிறந்த நாடு. அறிவில் உயர்ந்த நாடு, ஞான பூமி, இயற்கையழகில் இணையற்றது என்பதெல்லாம அன்றைய அறிஞர்களின் சக்திகளைக்கொண்டே யன்றி, இன்றைய அறிஞர்களின் செயலல்லவாகும். மற்றும் இன்றைய நிலை மெஞ்ஞானம் என்பது சோம்பேரித்தனம். இலக்கணம் இலக்கியம் என்பது ஏமாற்றவித்தை. கவிகளெல்லாம் புலவர்களின் திருட்டுத்தனம்

நூல்கள் மக்களைக் கெடுக்கும் மருந்து, படித்தவர்களெல்லாம் பிறரைக் கெடுப்பவர்கள் என்ற மாதிரியான பேச்சு நிறைந்த நிலை 100-க்கு 3-பேர்கூட கையெழுத்துப் போடத்தெரியாத நிலை. பேச்சுக்கு பேச்சு அடி உதை திட்டு மரியாதையற்ற சொல், இதுகள் நிறைந்த நிலை, வெள்ளையாகச் சொன்னால் உண்மையை உள்ளபடி சொன்னால் நம்மை நாமே தாழ்த்தியதாகுமே என்று வெளியில் சொல்லாத நிலை இன்றைய நிலை. என்பதை படிக்கும்போதே தெரிந்துப் படிக்கவேண்டும்.

ஆகவே உலகத்தோடு ஒத்துவாழவேண்டுமென்பது அன்றைய நிலையோடா அல்லது இன்றைய நிலையோடா என்று அடிக்கடி ஆலோசித்து

சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்

என்ற சட்டத்தை மேற்கொண்டு நம நாடு ஆற்றல் மிக்க அறிஞர்களால், முயற்சிமிக்க முனிவர்களால், தண்மை மிக்க தவசிகளால் சிந்தனை மிகுந்த சித்தர்களால் நடத்தி வந்ததைப்போல் இன்னும் அன்றைய ஆற்றலை நடத்தும் திறத்தோடு படிக்கவேண்டும்.

நற்பகுதிகளையெல்லாம் விட்டுவிட்டு தாழ்ச்தனவற்றையே சித்தரித்து நாட்டை எடை போடுதல் அவ்வளவு சிறந்த முறையல்லவே என சிலர் எண்ணலாம் அந்நல்லவைகள் எப்படி யிருக்கின்றதென பார்க்கும்போது

ஒரு உடலில் மூக்கை அழகுபடுத்த மாணிக்கத்தால் மிளிரும் தங்க மூக்குத்தி அணிந்து எவ்வளவு உயர்வு செய்தாலும், பக்கத்திலிருக்கும் காது புண்களால் அழுகி துற்நாற்றத்துடன் இருந்தால் மூக்கின் அழகிற்கு எவ்வளவு மதிப்பிருக்கும்:

நமது முகத்தையோ, தலையையோ மிக அழகுற சிங்காரித்துக் கொண்டு கால்களில் அழுகிய புண்களால் விரல்களெல்லாம் குறைந்து மொண்டி மொண்டி நடந்தால் முகம் தலைகளின் அழகுக்கு எவ்வளவு மதிப்பிருக்கும். அழகான மெத்தைவீடு அதில் நிறைய மின்சார விளக்குகள் ரேடியோ பாட்டுள்ள அழகிய மனையில் அழகும் ஒழுக்கமும் அமையாத பாட்டைத்தலை அழுக்கு உடை குளிக்

காத உடல் சினந்த முகம் உடைய பெண்மணிகளை நடமாடவிட்டால் அம்மனைக்கு எவ்வளவு மதிப்பிருக்கும் அதுபோல்தான் நம் நாட்டு மக்களின் ஒழுக்க நிலையையும் பார்க்கவேண்டும்.

நம் உடல்தான் நம் நாடு, நம் நாட்டு மக்கள் எல்லோரும் நம் நாட்டு அங்கங்கள், எந்த அங்கம் கெட்டாலும் நம் உடலாகிய நாட்டிற்கு கெட்டபேர்தான் கிடைக்கும். ஆதலால் இன்றைய நிலையையும் அன்றைய நிலையையும் எடைபோட்டு நல்லனவற்றை நடத்தையில் நிலை நாட்டும்வகையில் பொருளறிந்துப் படிக்கவேண்டும்.

# உலக நிலைக் கலை.

உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்

நாம் காணும் இவ்வொரு உலகத்தில் பல உலகங்கள் உள்ளன. இப்பல உலக நிலையையும் கண்டு அவ்வுலகங்களுக்குள் நுழையும் ஆற்றலைப் பெற்று, அவ்வவ்வுலகத்துள் வாழும் மக்களை உள்ளபடி அறிந்து, கண்டு, பேசி அவரவர்களின் நிலையை உணர்வது மிகக் கடினம். அரசர்களாகவோ அமைச்சர்களாகவோ சங்கத்தலைவர்களாகவோ செயலாளர்களாகவோ, பொதுத்தொண்டராகவோ இருப்பவர்களுக்கு இவ்வுலக யாத்திரை கட்டாயம் தேவைப்பட்டதாகும்.

இவ்வுலக யாத்திரைக்கு வண்டியோ, பணமோ, தேவையில்லை. இவ்வுலகம் வெகு தூரத்திலில்லை நம்மைச் சுற்றிலும் நிரம்பி உள்ளன. பல உலக மக்களும் இவ்வொரு உலகிலேயே கலந்திருந்தாலும் அவரவர்களின் உலக, வழக்கம், பழக்கம், உடை, உணவு, சொல், நடை, முதலியவைகளை விட்டுக் கொடுக்காமல் காத்து வருவது ஆராய்ந்தால் மிக ஆச்சரியத்தை விளைவிக்கும். தலைவர்களும் தலைவர்களும் தாங்கள் கொண்டதை நிறைவேற்றும் எண்ணமாகிய தலைமை உலகம். ஒவ்வொரு பொருளின் உட்கலைகளை யறிந்து மக்கட்கு விளங்கும் நிலையுடைய இயலால் விளக்கும் புலவர் உலகம்

கற்றோருக்கு கற்றோர் சித்தரித்து கலைகளாகப் புனைந்து களிப்பது கல்வி உலகம். செயலாளர்களோடுசெயலாளர்கள் கலந்து நாட்டை நடத்தும் வழிகள் நிறைந்த செயலாளர் உலகம். செல்வர் களோடு செல்வர்கள் சிறந்த முறை பேசி செழிப்பையே அமைக்கப் பார்க்கும் செல்வ உலகம். தொழிலாளிக்குத் தொழிலாளி தொடர்ந்து செயலாற்றும் நெருக்கம் நிறைந்த தொழிலுலகம். ஞானிகளுக்கு ஞானிகள் முக்காலத்தையுமெடை போட்டு, நிகழும் நிலையை விளக்கும் ஞான உலகம். இசைவாணரும் இசைவா ணரும் ஓசையின் தன்மையிலுள்ள உணர்ச்சியை அறிந்து மகிழும் சங்கீத உலகம். காலவேகத்தில் ஆங்காங்கு நிகழும் செயல்களை விளக்கி மனமாற்றும் பத்திரிகை உலகம். அவ்வக்கால நிலையை ஒவ்வொருவரும் உணரும் வண்ணம் சித்தரித்து விளக்கும் எழுத்தா ளர் உலகம். இப்படியாக பல உலகங்கள் நம்மைச் சுற்றிலுமுள்ளன. இவ்வுலகங்களோடு மட்டிலுமல்லாமல் சினிமா உலகம், காதலருல கம் சீட்டாட்ட உலகம், சூதாட்ட உலகம், விதண்டாவாத உலகம், அறியாமை நிறைந்த இருளுலகம் போன்ற பல உலகங்களும் உள்ளன.

அந்தந்த உலகிலுள்ளவர்கள் அவரவர்களை மேலானவர்க ளாகவே நினைத்து மற்ற உலகினரை மதிப்பதே கிடையாது.

கற்றவர்களை செல்வ உலகத்தார். மதிப்பதில்லை, செல்வ உலகத் தினரை கல்வி உலகத்தார் மதிப்பதில்லை. தொழிலுலகத்தாரை மற்ற எவ்வுகத்தாரும் மதிப்பதில்லை. நிர்வாக உலகத்தார் பிரஜை மக்களாகவே நினைப்பதில்லை.

ஒரு உலகத்திலுள்ளவர்கள் மற்றோருலகத்திலிருப்பவர்களை வேறு நாட்டாராகவே கருதுகிறார்கள். ஆனால் இத்தனை உலகத் தாரும் இவ்வொரு உலகத்திலேயே கலந்துதான் வாழ்கிறார்கள்.

எவ்வளவு கலந்து உறவாடினாலும் அவ்வவ்வுலக மக்களின் உணவு, உடை, சொல், நட்புகளால் இவர் இன்ன உலகத்தார் என்ற குறிப்பு அவரவர்களை அலங்கரித்து விளங்கும். ஆனால் இத்தனை

உலகங்களும் வேறு வேருகப் பிரிந்து இல்லாமல், கலந்து இருந்தா லும், அவ்வவ்வுலகத்தார் வீடுகளும் அவ்வீட்டினுள் அமைந்த அலங் காரங்களும், படங்கள், புத்தகங்கள், கருவிகள், குழந்தைகள், எல்லாம் சேர்ந்து அவர்களின் உலகத்தை உறுதிப்படுத்தும் முறையில் தனித்தனி பிரிந்து விளங்கக்காணலாம்.

இப்படிப்பட்ட காட்சிகளை சிந்தனை சக்தியுடன் ஆராய்ந்தால் இவ்வுலக நிலைகளின் வழிகள் நன்கு புலனுகும்.

வழியறிந்து சென்ருலன்றி எந்த உலகத்துள்ளும் நுழைய முடியாது. அவர்களும் தங்களுடன் ஒருவராகச் சேர்த்துக்கொள்ளப் படமாட்டார்கள்.

ஒவ்வொரு உலகத்திற்கும் தலைவர் செயலாளர் ஆலோசனை யாளர்கள் இப்படிப்பட்ட நிர்வாகங்கள் உண்டு.

கல்வியறிவில்லாவிடினும் கட்டுப்பாடாகத் தங்களின் திட்டத்தை நிறைவேற்றி அவ்வுலகை நடத்தி வந்துகொண்டிருப்பார்கள்.

ஒருலகத்திலுள்ளவர்கள் மற்ருேருலகத்திலுள்ளவர்களை உத விக்கு அழைத்துக்கொண்டு, அதற்கான பொருள் கொடுத்து வந்தா லும், ஒருவரையொருவர் ஏமாந்தவரைக்கும் ஏமாற்றி பொருள் சேர்ப்பதே உயர்ந்த நிலையென நினைக்கிருர்கள். இப்படிப்பட்ட புலன்களை (வழிகளை) உணர்ந்தோர்களைத்தான் புலவர்கள் என்றும், இத்துறைகளையெல்லாம் கடந்து வந்ததால்தான் துறவிகள் என் றும் பெயர்கள் வழங்கப்பட்டன.

நாட்டுப் பொதுத் தொண்டர்கள் தங்கள் தலைவர்களை இவ்வு லகங்களுக்கெல்லாம் அழைத்துப் போய் ஆங்காங்குள்ள மக்களின் இல்வாழ்க்கை நிலைகளில் உள்ள மாறுபாடுகளை உணர்த்தி, அவர்கள் அறியாமல் இருந்தாலும், கேட்காமலிருந்தாலும் முன் சென்று உதவி புரிவதே தொண்டர்கள் கடமையாகும்.

உதவி என்பது உடல் வளர்ப்புதவி, அறிவு வளர்ப்புதவி, என இருவகைப்படும். உடல் வளர்ப்புதவியை விட அறிவு வளர்ப்புதவியே நிலையுடையதாகும். உடல் வளர்ப்பு எண்ணத்திலேயே உலக மக்கள் ஊறிவிட்டபடியால் இன்பம் இன்னதென்றே உணரா தாய் விழந்தாராகிவிட்டனர்.

இன்பம் இன்னதென்ற அமைதியை அடையவில்லையானால், இவ்வுடலின் வாழ்க்கை துன்பமுடையதாகி வருந்தி உயிர் நீப்பர். அந்நிலை இந்நாட்டிற்கு இயல்பானதல்லவாதலால், உடலுள்ளபோதே உலக இயல்களையறிந்து, மக்கள் தன்மைகளையறிந்து, சுதந்திர எண்ணமுடையாராக வாழ்வதே வாழ்க்கையின் பலன், உயர்ந்த மனிதப் பிறவியின் பலன், என்ற உலக இயலை நன்கு ஊன்றிப் படிக்க வேண்டும்.

படித்து, அப்படிப்பின் சாரத்தை தம்மை நம்பி நட்புகொண்ட நண்பருக்கும் கூறி, அவர் உள்ளத்தை விடுதலையாக்குவிக்கும் முறையில் ஊக்கம் குறையாதபடி அறிவு வளர்ச்சியை ஓர் தொழிலாகவே கருதிப் படிக்கவேண்டும்.

இப்படிப்பட்ட உலகங்களைத்தான் திருவள்ளுவர் விண்ணுலகு வானுலகு புத்தேளுலகு என்றார்.

விண்ணுள் விண்ணாய் விளங்கும் ஆத்மீக சக்தி வாய்ந்த விண்ணவர் (நுட்ப அறிஞர்களின்) கூட்டங்களை; விண்ணுலகு, வானுலகு என்றும்.

புத்தியால் பகுத்தறியும் பரந்த எண்ணமுடையார்களின் கூட்டங்களை; புத்தேளிர் உலகு என்றும், செல்வர்கள் உலகை இந்திரனுலகு என்றும் ஆங்காங்கு வருவனவாற்றாலறியலாம் (டில்லிக்கு பழைய பெயர் இந்திரப்பிரஸ்தம்) மற்றபடி எந்நூலிலும் எவ்வுலகத்தை சித்தரித்தாலும் (கைலாயம், வைகுண்டம், சுவர்க்கம், என்ற மாதிரி) அவ்வுலகங்கள் எல்லாம் மக்களின் மனப்பான்மையானத் தன்மையின் கூட்டத்தையே என ஐயமறப் படித்துப் பொருளறிய வேண்டும்.

# இசைக் கலை

*நசைஇ யார் நல்லா ரெனினும் அவர்மாட்*
*டிசையு மினிய செவிக்கு*

இசை என்பது முத்தமிழில் ஓர் பகுதியாகும். இசை என்பதற்கு ஒலி, இணங்கு, புகழ் என்று பொருள். இங்கு ஒலி என்ற பொருளை மட்டிலும் எடுத்து ஆராய்வோம்.

ஒலியானது எழுத்தாகி, சொல்லாகி, மொழியாகி பேசப்படுவதற்கு முன் உலகமே ஒலியாகவேதான் இருந்தது. இன்றும் குழந்தையில் ஒலியாகச் சத்தி, பின் எழுத்தாகி சொல்லாகி மொழியாகி பேசப்படுவதைக் காண்கிறோம். அதேமாதிரி உலகிற்கு முதற் காரணம் ஒலி. இந்த ஒலி என்ற இரண்டெழுத்திலும் லி-யை விட்டு ஒ, மட்டிலுமாக இசைப்பதே சரியான இசையாகும். இந்த ஓ. என்ற எழுத்தில் அ. உ. ஒ. ம். என்ற நான்கு எழுத்தும் அடங்கி உள்ளன. இம்முறைகளைத்தான் ஓம் என்ற மந்திரமாகவும் ஓங்கார வடிவமே உலகிற்கு முதற்காரணமென்றும் நூல்கள் கூறும் O. ெ. அ. உ. ஒ. O. இதில் முதல் உருண்டை வடிவம மௌனமான நிலை. அதிலிருந்து வெளி வரும் கோடு ஒலி கிளம்பி வெளிவரும் முதல் இசையான அ. அது நீளும்போது உ. ஆகிறது உ என்ற இசை முதிர்ந்த நிலை ஒ ஆகி முடிவில் ()-உருண்டை வடிவுள்ள உலக நிலையான மௌனத்தில் முடிகிறது. அவ்வுருண்டையே மெய் எழுத்தென்றும் கூறுவார். எந்த எழுத்தின் மேலும், ஒரு உருண்டை வைத்துவிட்டால் அவ்வெழுத்து மௌனத்தை அடைந்து விடும் (தன் ஒலி அடங்கிவிடும்)

இவ்வோங்காரத்தை வடிவாக்கியதுதான் விநாயகன் ஆதி மூலன் ஒற்றைக்கொம்போன் என பல பெயரால் அழைக்கும் பிள்ளையார் ஆக்கிவிட்டார்கள். ஒ என்ற எழுத்துக்கு ஒரு கொம்புதான் உண்டு (மற்றையக்கொம்பு கயமுகனுக்காகவோ பாரதம் எழுதவோ ஒடித்த கதை மிக வேடிக்கை). நிற்க

அ. உ. ஒ. வாக ஒலிக்கும் உயிர்மயமான ஒலிக்குறிப்பில், தம் எண்ணத்தை நுழைந்து ஒலி வடிவோடு, தம்மன வடிவும் கலந்து ஒன்றுபடும் தன்மைதான், இசையின் பலனான இன்ப நிலையாகும்.

அந்நிலைகள் தாரத்தில் 4 வகையாகும். இசையை தாழ்விலிருந்து சிறிது சிறிதாக உயர்த்திக்கொண்டு போகும் நிலை 7 ஆகும் அதற்குச் சுரம் என்று பெயர்.

ச, ரி, க, ம, ப, த, நி. அதாவது மூடியுள்ள வாயைத்திறக்க அ. இசை பொருந்திய ச. என்ற எழுத்தையும், திறந்த வாயை உடனே மூடாதபடி இசையை உயர்த்த ரி. க. என்ற எழுத்துக்களையும், நீண்ட நேரம் வாயை மூடாதபடி இருக்க முடியாதாகையால் வாயை மூடி திறக்கும் நிலையுள்ள ம. ப. என்ற மெல்லினம் வல்லினம் ஆன இரண்டிசை பொருந்த இரு எழுத்தையும், உயர்ந்துப்போகப் போக எவ்வித உறுபுகளின் உதவியுமில்லாதிருந்தால் ஓசை வலிமை பெற்று நிற்காதாகையால் நாக்கின் உதவி பெற்ற த. நி. என்ற எழுத்தையும் ஓசையுடன் இணைத்திருக்கின்றாரெனப் புலனாகிறது.

இவ்வித சுரம் அமைந்த இசைகளில் 9 வகை குறிப்புகள் உண்டு. அவையாவன சிங்காரம், வீரம், நகை, கருணை, கோபம், வெட்கம், சாந்தம், அற்புதம், பயம்.

சிங்காரம்—இயற்கையழகுகளை வர்ணித்துப் பாடுவது
வீரம்—தனது வலிமையை உயர்த்தி வீரமாகப் பாடுவது
நகை—மகிழ்வை மூட்டி சிரிக்க, களிக்கப்பாடுவது
கருணை—அன்புமேலீட்டால் உள்ள முருக, அழுவதாகப் பாடுவது.
கோபம்—குற்றங்களைக் கண்டிக்க சினந்து பாடுவது
வெட்கம்—மானத்தைத் தாங்கமாட்டாமல் வருந்தப்பாடுவது
சாந்தம்—அடக்கத்தன்மை பொருந்தப்பாடுவது
அற்புதம்—ஆச்சரியத்தை விளக்க அதிசயமாகப் பாடுவது
பயம்—திடுக்குற்று பயந்த நிலையில் பாடுவது

இவ்வொன்பது நிலைகளும் மக்கள் வாழ்க்கையில் நிகழும் அமைப்புகளேயாகும்.

பேசுவதில்கூட இவ்வொன்பது நிலைகளும் கலந்தே வருவதை ஆய்ந்தோர் அறிவர்.

இந்நிலைகளைப்பாட 32-வகை இராகங்களும், 72-உப இராகங்களும், உண்டு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | பைரவி | 11 | பல்லதி | 21 | மாளவி |
| 2 | தேவகிரியை | 12 | சாவேரி | 22 | நாராயணி |
| 3 | மேகவிரஞ்சி | 13 | படமஞ்சரி | 23 | குண்டக்கிரியை |
| 4 | குறிஞ்சி | 14 | தேசி | 24 | கூர்சரி |
| 5 | பூபாளம் | 15 | இலலிதை | 25 | பங்காளம் |
| 6 | வேளாவளி | 16 | தோடி | 26 | தன்னியாசி |
| 7 | பிலகரி | 17 | வசந்தம் | 27 | காம்போதி |
| 8 | பௌளி | 18 | இராமக்கிரியை | 28 | கௌரி |
| 9 | சீராகம் | 19 | வராளி | 29 | நாட்டை |
| 10 | இந்தோளம் | 20 | கைசிகம் | 30 | தேசாட்சரி |
| | | 31 | காந்தாரி | 32 | சாரங்கம் |

இவைகளில் புருடவிராகம், பெண்ணிராகம், அரசவிராகம், அமைச்சவிராகம் என பலவகைகள் உண்டு.

புருடவிராகம்— பைரவி பூபாளம் சீராகம் படமஞ்சரி வசந்தம் மாளவி பங்காளம் நாட்டை.

பெண்ணிராகம்—தேவக்கிரியை, மேகவிரஞ்சி, குறிஞ்சி, வேளாவளி, பிலகரி பௌளி தேசி இலலிதை தோடி இராமக்கிரியை வராளி கைசிகம் நாராயணி, குண்டக்கிரியை கூர்சரி, தன்னியாசி, காம்போதி, கௌளி, தேசாட்சரி, காந்தாரி, சாரங்கம், ஆகும்.

| | |
|---|---|
| வெண்பாவிற்கு | சங்கராபரணம் |
| ஆசிரியப்பாவிற்கு | தோடி |
| கலிப்பாவிற்கு | பந்துவராளி |
| கலித்துறைக்கு | பைரவி |

| | |
|---|---|
| விருத்தத்திற்கு | கலியாணி, காம்போதி, மத்யமாவதி |
| தேவாரத்திற்கு | பூபாளம் |
| இரக்கம், துக்கத்திற்கு | நீலாய்புரி, பியாகடம் புன்னகவாளி வராளி |
| மகிழ்ச்சிக்கு | காம்போதி சாவேரி தன்னியாசி |
| யுத்தத்திற்கு | நாட்டை |
| வசந்தகாலத்திற்கு | காம்போதி அசாவேரி தன்னியாசி |
| மாலை நேரத்திற்கு | கல்யாணி காம்போதி |
| நடு இரவிற்கு | ஆசரி |
| விடியற்காலைக்கு | இராமக்கிரியை இந்தோளம் தேசாட்சரி நாட்டை பூபாளம் |
| உச்சிக்கு | சாரங்கம் தேசாட்சரி |

இம்மாதிரி இராகங்களின் முறைகளுடன் காலத்தையு மறிந்துப்பாடினல் பிறர் உள்ளத்தைக் கவர்ந்து இன்பத்திலாழ்த்தும்

இராகத்தைக் கற்பதற்கு முன்னல் அருட்பா தாயுமானர் போன்ற பாடல்களில் பலவற்றை மனப்பாடம் செய்துகொண்டு எந்தெந்த பாட்டுகள் எந்தெந்த இசையில் இயைகிறதென்று தெறிந்துக் கொள்வது எளிய முறை. இவ்வளவு முறையறிந்து பாடும் பாட்டுகளுக்கு இசை எவ்வளவு இன்றியமையாததோ அதேபோல் தாளமும் இன்றியமையாததாகும்.

தாளம் என்பது காலத்தைக் கட்டுப்படுத்தி அளவாக இசையைக்கொண்டுபோக அளவு கோலாகும். தாளமும் 64 கலைகளில் ஒன்றாகும்.

காலத்தை முதலில் ஓர் அளவு படுத்திக்கொண்டாலொளிய கால ஓட்டத்தில் நுணுக்கமாகப் புத்தியைச் செலுத்த முடியாதாகையால் கால நுட்பத்தை நுண்ணறிவால் வெகு நுணுக்கமுடன் உணர வேண்டும்.

உலகம் பல அணுக்களின் கூட்டுறவால் அமைந்திருப்பதே போல் காலமும் பல அணுக்கள் மயமாகவே உள்ளன.

ஆதலால் ஒரு அணுநேரத்திலிருந்தே கணக்கெடுக்கக் காலம் இடந்தரும். நமது கண்ணிமை இரண்டும் தட்டும் நேரம் ஒரு நொடி அல்லது கணம் என்று சொல்லப்படும். கையைத் தட்டுவதும் அதற்குப் பொருந்தும். இந்தட்டுதலிலிருந்தே நேரத்தை அளவெடுத்து

கணத்திற்குக் கணம் தவறாமல் தட்டிப்பார்த்து, இடைநேரம் ஒரு அணுவும் மாறாமல் அமைவதை உள்ளம் அறிந்து கணக்கில் சரிவந்ததாக ஆசிரியர் ஒப்புக்கொண்டால் ஒரு நிலை உணர்ந்ததாகமுடியும்.

ஒரு தட்டுதலை ஒரு எழுத்து வடிவமாக்கிக்கொண்டால் எளிதாக வழிகளை உணரலாகும், அதாவது முதல் தட்டு தா. இரண்டாவது அம். இப்படியே தா—அம். தா—அம். என்று இடை நேரங்களின் அளவு சரி பார்த்துத் தட்டிப்பார்த்தால் எழுத்தும் தட்டும் சரியாக வரும்.

## ஏக தாளம்.

அது நன்கு விளங்கினவுடன் தா-என்ற தட்டுடன் நிறுத்தி அம் என்ற தட்டை தட்டாமல், மறுபடியும் தா-என்ற அளவை கணக்காகப்பிடித்துத் தட்டிப்பழக வேண்டும். அப்போது இடையில் 3-கண நேரம் ஓய்வாக ஓடுகிறது, இப்படி சரிபார்த்துத் தட்டும் போது அத்தாளத்திற்குப் பெயர் ஏக தாளம் என்பர்.

## ஆதி தாளம்.

இப்போது தா என்று தட்டி அம் என்பதை ஓய்வாக நிறுத்தி தா ... ... தா ... ... தா என்று மூன்று முறை தட்டி அம்...அம்... என சும்மா தட்டாமலிருந்து இடைநொடி தவறாமல் தா...தா...தா ... மூன்று தட்டு தட்டி இரண்டு, அம், நேரம் சும்மா இருந்து இப்படியே தவறாமல் காலத்தைப் பிடிப்பது ஆதிதாளம் என்பர்.

இரண்டுமுறை தட்டி இரண்டு முறை தட்டுவதை ஓய்வெடுப்பது ரூபக தாளம்.

ஒரு தட்டு தட்டி $1\frac{1}{2}$ கணம் ஓய்வெடுத்து இரண்டு தட்டு தட்டுதல் ஜம்பை தாளம். ஒரு தட்டுக்குப் பின் இரண்டு கணம் ஓய்வெடுத்து ஒரு தட்டுத் தட்டி இரண்டு கணத்திற்குப் பின் கணத்திற்குக் கணம் இரண்டு தட்டுதல் இப்படியே அளவறிந்து தட்டினால் திரிபுடை தாளம் என்பர்.

இம்முறைகளில் அணு நேரம் தப்பினாலும் தாளம் தடைப்பட்டு விடும். இத்தாள ஞானம் உள்ளத்திற்கு விளங்கி விட்டால் கால ஓட்டத்தின் அளவு வெகு நன்றாக அணுவுக்கணுவாக விளங்கும். ஆதலால் இசை ஞானமும் தாள ஞானமும் மக்களுக்குத் தேவைப்பட்டதேயாகும். ஆனால் குழந்தைப் பருவத்தில் கல்வியுடனேயே இதைக் கலந்து விளக்குதல் மிக நல்லது.

இப்படிப்பட்ட ஞானம் இல்லாதவர்கள் இசையரங்கு பாட்டரங்குகளில் காலம் கழிப்பது வீண் நேரமேயாகும். ஏனெனில் அதனின் உண்மை விளங்காததால் இன்பம் சுரப்பதில்லை.

## பாடும் முறை.

பண்ணென்னும் பாடற் கியைபின்றேல் கண்ணென்னும்
கண்ணோட்ட மில்லாத கண்.

பாட்டுக்குப் பொருந்த இசையை அமைத்துப் பாடவில்லையானால் அவ்விசை பயன்படாது போவதுபோல், குறிப்பிலறியும் ஆற்றலைப் பெறாத கண்களும் பயன்படாது.

பாடுபவர்கள் பண்ணான இசையின் இயல்பை யறிந்து, இசையிலக்கணத்துடன் பாடாமல் கத்துபவர்கள், பண்ணான இசையின் உயர்வைக்கலைப்பவர்கள் ஆவார்கள். குழந்தைகளின் சொற்களில் வீணையினுடைய சுரத்தின் நுட்பத்தைவிட புள்ளாங் குழலினுள்ள ஓசையைவிட நுட்பமான ஓசை உள்ளது என இளங்குழந்தை மொழியை சிறப்பிக்கிறார்

யாழினிது குழலினிது என்பர் தம்மக்கள்
மழலைச்சொல்கேளா தவர்

நம் நாட்டில் இசையில் யாழும் குழலும் இன்பத்தை யூட்டி வந்துள்ளதென்றும், குழந்தைகளுள்ளம் அதைவிட இன்பச்சுவை மிகுந்ததென்றும் இசையுலகை வள்ளுவர் சித்திரிக்கிறார்.

மழைகாலத்தில் ஆற்றோரங்களிலும் வயல் புரங்களிலும் இரவு நேரங்களில் அல்லது காலை நேரங்களில் தங்கி இவ்வியற்கையின் இசையரங்குகளைக் கேட்டு சிந்தித்தால் இதனின் உண்மை விளங்கும்.

சுருதி வண்டு என்ற ஓர் பூச்சி 1-மணி நேரங்கூட மூச்சுவிடாமல் ரீ என்ற ஒலியுடன் உரத்த சத்தத்தை எழுப்பும்.

சங்கு தவளை முதலிய பூச்சிகள் இடையிடையே நிறுத்தி நிறுத்தி காலக் கணக்கில் தவறாமல் தாளம் மேளம் பொருந்த ஓசையெழுப்பியும், குழல் பூச்சிகள் புள்ளான் குழல் மாதிரியே சீக்கை என்ற சத்தத்தால் பாட்டு பாடுவதுமான நிலை உள்ளத்தைக் கவர்வனவாயிருக்கும்.

மாலை நேரங்களில் பறவைகளின் இசையரங்குகளைக் கேட்கில் குயில், கிளி, குருவி, காக்கை வானம்பாடி எல்லாம் ஒரு சேரக்கூவி ஓர் பொதுப்பாடலை அமைக்கும். அவ்வமயம் மலர்கள் மணங்களை வீசவும் சோலையின் இளந்தளிர்கள் தங்களது கைகளால் விசிறி வீசுவதுபோல சிறு காற்றை அசைக்கவும், பாட்டுகளில் தாலாட்டுப் பாட்டு ஏலேலோப் பாட்டு குறவஞ்சிப் பாட்டு கூத்தாட்டப்பாட்டு மாதிரியான மெட்டுகள் பொருந்த உள்ளங் களிகூறச் செய்யும்.

இப்படிப்பட்ட இயற்கையரங்குகள் அடிக்கடி கேட்க முடியாத நிலையமைவதால் தேவைப்பட்டபோது அவ்வரங்குகளை அமைக்கவே செயற்கைக் கருவிகளால் செய்து இன்பப்படுவதே இசையரங்கின் தத்துவமென்பதை ஆராய்ச்சியுடன் உள்ளம் தெளிவுபடும் முறையில் இசைக்கலைகளைப் படிக்கவேண்டும்.

---

# நடன கலை.

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று

நடன கலையானது நம் நாட்டிற்குச் சொந்தமானதாகும். ஆண் பெண் ஆகிய இருபாலாரும் அறிவுப் பயிற்சி உடற்பயிற்சி

ஆகிய இரண்டையும் இணைத்து குறிப்பு அபிநயம் முதலிய வகையில் நடித்துக்காட்டும் ஓர் நிலை.

நடன அரங்கம் என்பது சாதாரண இடம் அல்ல. பல பகை வர்கள் தங்கள் தங்களின் ஆயுதங்களால் வீச, இடையில் உள்ள ஓர் அரசன் அவ்வளவு எதிர்ப்பையும் சமாளித்துத் தனது திறமையை நிலைப்படுத்துவது போன்ற கலைகள் நிறைந்த இடம்தான் நடன அரங்காகும்.

நடனத்தில் பல குறிப்புகள் தோன்றி, அவரவர் எண்ணத்திற் கொத்தக்க பொருளைக் கொடுத்து, அவரவர்களை மகிழ்விக்கச் செய்யும் தன்மை உள்ளது.

ஞானிகளுக்கு ஞான உரை, காதலர்க்குக் காதலுரை, செல்வர் களுக்கும் தொழிலாளர்களுக்கும் அரசர்களுக்கும் இப்படி காண் போர்கள் உள்ளமெல்லாம் களிகூர்ந்து அப்படியே மயக்குவிக்கும் சக்தி நடனத்தில் உண்டு. நடன அரங்கில் இறங்கியவர் அணுநேரத்தை யும் பயன் படுத்தியே தீரவேண்டும். தாளத்திற்கொத்த நடை, இசைக் கொத்த நடிப்பு, கருத்தைப் பிறர் விளங்கிக்கொள்ள கை கால் முகம் கண் முதலிய உறுப்புக்களால் குறிப்புக்காட்டி வாயில் பாடிக் கொண்டே நடனம் நிகழவேண்டும்.

நடன கலைகளின் சக்திகளை உணருவோர் மிகக்குறைந்து விட்டனர் ஏன்? அவ்விலக்கணம் மக்கள் பால் பரவ இடமில்லாமல் போயிற்று.

எல்லாக் கலைகளைவிட நடனகலை ஓர் ஒப்பற்ற உயர்ந்த ஆற்றல் படைத்தது. அஷ்டாவதானம், தசாவதானம், சதாவதானம் என் கிறார்களே அதைவிட நடனகலை மேலானது என்றால் தப்பாகாது.

நுட்பத்திற்கு நுட்பமான ஓசையிலக்கணமும், அணுவுக்கு அணு வான தாள இலக்கணமும், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற தமிழ் இலக்கண அமைப்பும், உடல்கட்டுடன் எல்லா

அங்கங்களையும் வளைத்தல் நீட்டல் முடக்கல் ஆட்டல் பருத்தல் குறுக்கல் முதலிய அத்தனைக்கும் உறுபுகள் பொருந்தியும், உடலானது குள்ளமின்றி நீட்டலின்றி பருத்திராமல் மிகவும் இளைத்திராமல் கருத்திராமல் நோயடையாமல் இத்தனைக்கும் இடம் தந்து நிகழ்த்தும் செயல் நடனமென்றால், ஆற்றலோடு சிந்திப்போர்க்கு அதன் உண்மை விளங்கும்,

வாயளவு பேசுவதை விட்டு செயலளவில் இறங்கிப் பார்த்தால் இதன் தன்மைகள் நன்கு விளங்கிவிடும்,

மனதின் செயல், புத்தியின் செயல், சிந்தனையின் செயல், அகங்காரத்தின் செயல், அறிவின் செயல் அத்தனையையும் அறிந்து அவரவர்களுக்குத் தக்க நிலையால் மகிழ்விக்கும் காதல் சக்தி நடனத்திற்குண்டு.

நடன அரங்கிற்கு அம்பலம் என்றும் ஓர் பெயர் உண்டு. அம்பலம் என்பது ஞானிகள் கண்ட முடிவுநிலை. அம்முடிவில், எப்பற்றுதலுமற்ற பேரின்ப அறிஞர்கள் தான், அங்கு தங்கமுடியும். அந்த அம்பலத்தில்தான் பரமனும் நடம்புரிந்தார் என்று நூல்கள் கூறும். அவ்வித அம்பலத்தாடிகள்தான் நடன சிகாமணிகள், என்றால் அதில் தப்பிராது.

நடனத்தின் முறையறியாமல் வீண் கூத்துக்களால் கையை காலை கண்டபடிக் காட்டும் தெருவாட்டமல்ல நடனம். நடனத்திற்கு பலவகை இலக்கணமுண்டு அம்முறையில் பயின்ற நடனமேதான் நடனமாகும்.

## நடன கலையின் பலன்கள்

உடற் பயிற்சியில் செய்யமுடியாத நுட்பமானதும், வலிமை பெற்றதுமான சக்திகளை நடனத்தில் அடையலாம்.

புலவர்களாலும் திருத்த முடியாத உள்ளத்தையும் கவர்ந்து தன்வயப்படுத்தும் ஆற்றல் நடனத்திற்குண்டு.

செல்வத்தால் அமையும் அகம்பாவத்தைச் சமப்படுத்த நடனம் மிகப் பயன்படும்,

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு நிலையையும் விளக்குவதே நடனத்தின் செயல்,

இத்துணை செயல்களையெல்லாம் விளக்கும் பாடத்தை முகக் குறிப்பினுல், உள்ளக் களிப்பினுல், உடலின் உறப்பினுல், அணிகளின் மிதப்பினுல், ஆட்டத்தின் ஒலிப்பினுல், நோக்கத்தின் நுணுக்கத்தால் எல்லோருக்கும் உணர்த்தவே நடன கலை அமைந்துள்ளது.

மயில் தன் தோகையின் அழகாலும், விரித்து ஆடும் ஆட்டத் தாலும் மக்கள் மனதை மகிழ்விக்கிறது.

குயில் தன் இனிய ஓசையொன்றுல் கேட்போர் உள்ளத்தைக் கவர்கிறது.

மலர்கள் மணத்தாலும் அழகாலும் மக்கள் உள்ளத்தை இழுத்து மகிழ்விக்கிறது.

சலங்கைகள் ஓசையை எழுப்பி ஓங்கார சக்தியினுல் பிறர் உள்ளத்தைக் கவர்கிறது.

இப்படியே ஒன்று அல்லது இரண்டு குணம் அமைந்த பொருள் கள்தான் மக்களுடனும் மற்றவைகளுடனும் கூடி பிறர் மதிக்க வாழமுடிகிறது.

குணங்கள் என்று அமையப்பட்ட அறிவுக் குணங்கள் ஒன்றுவது அமையாத மக்கள்தான், யாருடனும் நட்புக்கொள்ள முடியாமல் அல்லலுருகின்றனர். இப்படியாக மக்களை உயர்த்தும் பல குணங் களும், ஒருங்கே அமைந்த நிலைதான் நடன கலையாகும்.

தற்போது மக்களிடம் கல்வியறிவு, முறையுடன் கல்லாமல் எப்படி சீர்கெட்டு விளங்குகின்றதோ; அதே மாதிரி நடன கலைகளும்

சீர்கெட்டுவிட்டன. சில எழுத்துக்களைத் தெரிவதே கல்வி என்று ஆனயாதிரி கை கால்களை ஆட்டிக்குதிப்பதே இன்றைய நடனமாக நடைபெறுகிறது.

சிரிப்புக்கும் காமத்திற்கும் இடங்கொடுக்கும் செயல்களே நடிப்பு என மாறிவிட்டது.

அரசர்களும் மதிக்கத்தக்க பெரு நிலையில், எங்கும் என்றும் போற்றப்பட்டு வந்த புலவர்கள் இன்று வீண் போலிச் செல்வர்களிடை இரந்து வாழும் நிலை கிடைத்ததேபோல், பரந்த எண்ணமுள்ள பாமனின் வழிவந்த நடன கலைகளும், அறிவற்ற மூடர்களுக்கு ஆளாகி வயிறு வளர்க்கும் நிலைக்குத் தாழ்ந்து விட்டது.

அதோடு நடனத்திற்கு பெண்கள்தான் சொந்தம் என்றும், அப்படி நடனங்கற்ற பெண்கள் சீர்கெட்டவர்கள் வாழ்க்கையில்லாதவர்கள், பொதுப் பெண்கள் என்றெல்லாம் தாழ்த்தி இழித்துப் பேசியே அக்கலைகளைத் தாழ்த்திவிட்டனர்.

நடனத்திற்கு ஆண்களே முதன்மைப் பட்டவர்கள் (பாமனே இதற்குச் சான்று) பெண்களும் பொருத்தமே. இந் நடனம் இன்று பல வெளி நாடுகளில் ஆண் பெண்களிடை அழகுபட நிலவி வருகிறது.

ஆதலால் இம்முறைகளை உள்ளபடி ஆய்ந்து உண்மை உணர்ந்துக்கொள்ளும் முறையில் நடன கலைகளைப் படிக்கவேண்டும்.

---

## ஓவியக்கலை.

ஓவியக்கலை என்பது சுவற்றில் கல்களில் மற்றையப் பகுதிகளில் வரையும் படங்களாகும். அதாவது ஒரு செயலை சித்தரித்து விளக்கும்வரைவு நிலையாகும். புலவர்கள் செய்யுட்களால் நிகழ்ச்சியை வர்ணிப்பார்கள். ஓவியக்காரர் அந்நிலையை நேரில் காட்டுவார்கள்.

ஒரு அடி அகலத்திலேயே ஒரு பெரிய மலையையும் ஒரு நாட்டையும் எழுதலேடுங்கூடக் காட்டுவார்கள்.

ஒரு சிறிய பகுதியில், ஒருபொருளை தூரத்திலிருப்பதாகச் சமீபத்திலிருப்பதாக உயரமான 400 அடி 1000 அடி உயரம், அகலமான தாகவும் வகைப்படுத்த ஓவியக்கலை இடமளிக்கிறது.

காலை என்ற ஒரு நேரத்திலே கடலுக்கப்பாலிருந்து சூரியன் சுடர் என்ற படைகளுடன் வெளிவரவும், கடற்கரையின் மேலுள்ள மரங்கள் செடிகளின் மலர்கள் மலர்ந்த முகத்தால் மணங்களை வீசிவர வேற்கவும், மரங்களில் உள்ள பறவைகள் பாடியும், இன்சொலால் ஆசி கூறி அழைக்கவும், மான் முயல் மயில் போன்ற மிருகங்கள் இன்பக்கூத்தாடவுமான ஓர் நிலையை ஓர் ஓவியத்தால் விளக்கிக் காட்டமுடிகிறது. அவ்வக்கால நிலையை அவ்வக்கால மக்களின் வாழ்க்கையை, ஒழுக்கத்தைக் காட்டுவதற்கு ஓவியக்கலைப் பயன்பட்டு வந்துள்ளது.

பண்டைய காலத்தில் அறிஞர்கள், சித்தர்கள், முனிவர்கள், அரசர்கள், அரண்மனைகள், கோவில்கள், வீடுகள் அவைகளிலுள்ள பொருள்களையும் இன்று படங்களில் காண்கிறோம். சடை முடியோடு தோலுடை தரித்திருந்த கால முதல் இன்றுவரை மக்கள் நிலையை படத்தில் ஆழ்ந்து பார்த்தால் நன்கு விளங்கும்.

பண்டைய மக்கள் தங்கள் படுக்கை மணை முக்காலி நாற்காலி படகு வண்டி முதலியவைகளை அவரவர்களின் அறிவுக்கேற்ற முறையில், பாம்பாக மயிலாக கோழியாக கருடனாக மாடாக தேராக அன்னமாக மலராக இப்படி பலவித இயற்கையமைப்புகள் போல அமைத்திருக்கின்றனர் என்பது அவர்களின் செயலால் படங்களில் தெரிகிறது. மற்றும் ஓவியக்கலையின் திறமையை ஆராய்ந்தால் வியப்பைத்தரும். ஓர் படத்தின் எதிரில் இருந்து பார்த்தால் முருகன் கையில் வேலுடன் மயில் மீது வள்ளி தெய்வானையுடன் வீற்றிருப்பர். அதே படத்தை அப்படத்தின் இடது பக்கம் சற்று சாய்ந்து பார்த்தால் ராதா ருக்மணியுடன் கண்ணன் ரத்தின சிம்மாசனத்தில்

வீற்றிருப்பார். அதே படத்தை வலது பக்கத்தில் சாய்ந்து பார்த்தால் கலைவாணி ஓர் குளத்தின் தாமரை மீது வீற்றிருந்து கையில் வீணை வைத்து பாடவும், அருகில் யானைகள் நீரை வாரி இறைக்கவும் மயில்கள் சாயலுடன் ஆடவுமான நிலையை அழகுபட விளக்கும். இப்படியே பலவகைப் படங்கள் உண்டு. ஒரே படத்தில் மூன்று வகைகளை பலபலவித உருவங்களாக வரைந்திருப்பர், இன்றைக்கும் அப்படங்கள் பல இடங்களில் உள்ளன. ஆனால் அக்கலைஞர்கள் இன்றைக்குமிகக் குறைந்துவிட்டனர்.

மற்றோர் விதம் உண்டு, ஓர் மோதிரத்தில் வைத்துள்ள பருப்பளவு கண்ணாடிக்குள் பழனிமலைமேல் தண்டபாணி முருகன், அரங்கத்தில் பள்ளிகொண்ட அரங்கநாதர் போன்ற பல பெருங்காட்சிகளை அடக்கியுள்ளனர் (இதைக் கண்டவர்களும் இம்மோதிரம் உடையவர்களும் இருக்கிறார்கள்.) இப்படியெல்லாம் பார்க்கும்போது ஓவியக்கலை ஞானம், என்பது ஓர் பரந்த பேரறிவேயாகும்.

ஓவியக்கலைஞர்கள் தனது நோக்கத்தால் காணும் அந்நிலையை அப்படியே படம் பிடித்து விடுகிறார்கள். அப்படிப் பிடிக்கப்படும் மனப் போட்டோப் படம், எப்போது எழுத ஆரம்பித்தாலும் அப்போது எதிரில் வந்து நிற்கிறது.

அவ்வளவு மனத்திடமும் அறிவு நுட்பமும் ஓவியக்கலைஞரிடம் நிரம்பியுள்ளது.

சில கோவில்களில் பல அரசர்களுடைய சரித்திரம் எழுதியுள்ளதை காண்கிறோம்.

புலவர்கள் செய்யுட்களால் கால நிலை ஒழுக்க நிலையை விளக்குவதைத் தெரிந்துக்கொள்வதோடு அப்புலவர்களின் பெயரும் தெரிந்துக் கொள்ள முடிகிறது. ஆனால், இப்பெரு ஓவியக்கலைகளை அவ்வப்போது வளர்த்தும் திருத்தியும் பெருக்கியுங்காத்த ஓவியப்புலவர்களைத் தெரிந்துக்கொள்ளும் முறையில் அவர்கள், பெயர்களைப் பொறிக்க மறந்தனர் போலும், அன்றி மக்கள் இவ்வோவியக்கலையின் நிலையை

அறிந்து அதற்கீடாக வழங்கும் புகழ் அதற்கீடாகாது. ஆதலால் அப்புகழ் வேண்டாம் என்று விட்டனரோ என்று கூட எண்ண இடமளிக்கிறது.

ஒரு நகத்தைச் சித்தரித்த ஓவியம் அந்நகத்தையுடையாரைப் போலவே இருந்ததாகவும், ஒரு மயிரைக் கொடுத்து அம்மயிரையுடையாள் எப்படியிருப்பள் என்று ஓவியக்காரரைக் கேட்க, அம்மயிரைக்கொண்டே சித்தரித்த ஓவியம் அம்மயிரையுடையாளைப் பார்த்த மாதிரியே இருந்ததென்பது ஓவியக்கலையின் திறமென்றால், எவ்வளவு மேம்பாடானதென்பதையும், அப்படிப்பட்ட கலைகளின் நுட்ப அறிவும் குறிப்பும் நோக்கத்தின் நுணுக்கத்தையும் ஓவியக்கலைகளைப் பார்த்து உணரும் முறையில் படிக்கவேண்டும்.

ஒரே படத்தில் ஓர் அரசன் கோபிக்கவும், மந்திரி வெறுக்கவும் குரு மகிழவும், காவல்காரன் அஞ்சவும், எதிரில் உள்ளவன் துக்கிக்கவுமான முகக்குறிப்பை அமைக்கும் ஓவியப்புலமையைக் காணக் காண உள்ளக் களிப்பால் மகிழ்ந்து இன்பத்திலாழும் அந்நிலையைத் தெரிந்தும் படிக்கவேண்டும்.

---

# சிற்பக் கலை.

---

சிற்பக்கலை பலவகைப்பட்டன. மண் சிற்பி, மரச்சிற்பி உலோகச்சிற்பி, மொழிச்சிற்பி என பலவகைகள் உண்டு.

மண்ணுகளைக் கொண்டும், மாக்கல் முதலிய படிகக் கல்லுகளைக்கொண்டும், மக்கள் வாழ்க்கைக்குத் தக்க கருவிகளைச் செய்வோர் மண் சிற்பிகள் ஆவர்.

மரங்களைக்கொண்டு மக்கள் வாழ்க்கையை நடத்தும் சாமான்களை அமைப்பவர் மரச்சிற்பிகள் ஆவார்.

தங்கம், வெள்ளி, இரும்பு, செம்பு, பித்தளை, ஈயம் முதலிய உலோகங்களால் மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய கருவிகளைச் செய்வோர்கள் உலோகச்சிற்பிகள் ஆவார்.

மொழிகளைக்கொண்டு மக்களுக்குத் தேவையான அறிவுத்துறைகளை விளக்கும் கவிகளை செய்துக்கொடுப்பவர்களை மொழிச் சிற்பிகள் எனப்படுவார்கள்.

இம்மாதிரியான சிற்பிகளை நம் நாட்டில் பண்டைய அரசர்கள் பாதுகாத்து வந்ததோடு அவர்களின் அறிவை கால மாற்றத்திற்கேற்ப உயர்த்திக்கொண்டே வந்துள்ளார்கள். அப்படி வளர்ந்துக் கொண்டே வந்த சிற்பிகளின் அறிவு, இன்றுவரை அரசாங்கப் பாதுகாப்பில் வளர்ந்து சிறந்த பேரறிவின் உயர்ந்த நிலைகளை வகுத்திருந்தால், இன்றைக்கு உலகத்தில் நிகழும் புதுச்செயல்கள் நம் நாட்டு சிற்பிகள் செயலுக்கு 1000-க்கு ஒரு மடங்கும் ஈடாகாது என்பதை பண்டைய சிற்பிகளின் ஆரம்பத்திட்டமே உறுதிப்படுத்துகின்றது.

நம் நாட்டுப் பண்டையச் சிற்பிகள் கண்ட நிலைகளையே இப்போதையப் புதுச்சிற்பிகள் மேலே சிங்காரித்து மூடியால் மறைத்திருக்கிறார்களே ஒழிய, புது முறைகள் அல்லவென்பதை ஆய்ந்தால் அறியலாகும்.

நம் பண்டையக் கற்பனை சக்திமிக்க சிற்ப அறிஞர்கள் முக்காலத்திற்கு மொத்த நிலையை உணர்ந்த பேரறிஞர்கள் என்பது இன்றைய நிலையை உணர்வதாலேயே மிக எளிதில் தெரிகிறது.

எப்படி என ஆராய்வோம்.

உலோகச்சிற்பிகள் தங்கத்தால் எது எதுகள் செய்ய உதவுமென்றும், தங்க நாணயங்களை எப்படி உபயோகிக்கலாம் அதற்குக் காலம் மதிப்பு எவ்வளவு என்று நிர்ணயித்தார்களோ அதில் சிறிதும் இன்றுவரை மாற்றமில்லை. தங்கம் பண்டைய காலத்தில் மற்ற பொருள்களை விட உயர்ந்தமதிப்பு என்றார்கள். அது இன்றும் அப்படியேதான் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இரும்பு மற்ற பொருள்களில்

கெட்டியானது. கல் மரம் முதலியவைகளால் செய்ய முடியாத கெட்டிப்பொருள்களை இரும்பால் செய்யப்பட்டார்கள். பித்தளை செம்பு, வெண்கலம் முதலியவைகளால் வீட்டுச்சாமான்கள் செய்யப் பட்டார்கள். ஈயத்தை கலர்பூச கம்பி இழுக்க பயன் படுத்தினர்கள்.

இப்படி உலோகங்களைக்கொண்டு செய்யும் சாமான்கள் மக்கள் பயன்படுத்தத்தக்கவாறு கைப்பிடி, தூக்குப்பிடி, கழுத்துப்பிடி தலை யில் தோளில் தூக்கத்தக்க அடிப்படையுடன் அடுக்க குவிக்க சொருக திருகத்தக்க அமைப்புகளைப் பொருத்தியும், அவைகளின் வடிவம் இலைமாதிரி, காய், பூ, மாதிரி மரங்கள், விலங்குகள், மாதிரி பறவை களின் அமைப்பு மாதிரி அழகு பட சித்தரித்திருப்பதின் சிற்பக்கலை களின் தோற்றம் அன்றைய நிலையிலிருந்து இன்றுவரை திரும்பத் திரும்ப அதையே செய்து வருவனவாயிருக்கிறதே ஒழிய வேறு பட்டப் புதுக்கற்பனைச் சிற்பம் உதிக்க வழியில்லாதவாறு அமைந் துள்ளது.

தண்ணீர் குடிக்கும் டம்ளர் கண்ணாடியால், பீங்கானல், மாறி ற்றே ஒழிய வடிவத்தை மாற்றி வேறு ஒரு வடிவம் கற்பிக்க வழியில்லை.

உலோகச்சிற்பிகளால் கற்பித்தவைகளேதான் வீட்டுச் சாமான் களான சகல வகைகளும் ஆகும். அவைகள் இன்றுவரை அரசாங்கப் பாது காப்பில் வளர்ச்சியடைந்துக்கொண்டே வந்திருந்தால் இன் றைக்கு உலோகச்சிற்பங்கள் யாவும் பல அற்புதச் செயல் புரிவதாக அமைந்திருந்திருக்கும்.

**மரச்சிற்பிகள்** இவர்கள் மரங்களைக்கொண்டு வாழ்க்கைக்கான வீடும், வீட்டுக்கு வேண்டிய சட்டம், விட்டம், சாம், கதவு. சன்னல் (வெளி வழி) அலமாரி, பெட்டிகள், கட்டில், ஊஞ்சல், நாற்காலி முக்காலி, சாய்வு நாற்காலி, படுக்கை நாற்காலி, கூடக்கட்டில், மாடக்கட்டில், கைத்தொழிலுக்கான கருவிகள், உழவுத்தொழிலுக் கான கருவிகள் இப்படியாக உள்ளவைகளை அழகுபட மிருதுவாக இளைத்து இடத்திற்குத்தக்க சித்திரம் அமைத்து மூடித்திறத்தல்

சொருவி இழுத்தல், பூட்டுகள், சாவிகள், கீல்கள் போன்றவைகளை யும் கண்டுபிடித்திருந்தார்கள். அது மட்டிலுமா வண்டிகள் அதற்குச் சக்கரங்கள் வண்டியில் உள்ளவர்களுக்கு நிழல்தர மேல் மூடிகள், வண்டியிலேயே பெட்டிகள்போன்ற திறமையை அமைத்துப்போன அவைகளையே திரும்பத் திரும்ப அதேமாதிரி செய்துக்கொள்ளு கிறார்களே ஒழிய, புதுக்கற்பனையான பொருள்கள் கண்டதாகத் தெரியவில்லை. வண்டிகளை இன்று ஆவி இழுக்கலாம் எலக்ட்ரிக்கால் ஓட்டலாம். ஆனால் வடிவில் வேறுபாடு இல்லை.

**மண் சிற்பிகள்** இவர்கள் மண்ணால் கல்லால் சுவர் முதலிய கட்டடங்களும், சுண்ணாம்பு காவிக்கல் இவைகளால் அலங்காரங்கள் மற்றும் மண் பொம்மைகள், சிற்ப வீடுகள், சிற்பக்கோவில்கள் சாலைகள், (ரோட்டு) சலதாரைகள், தொட்டிகள், பாலங்கள் அணை கள், அரண்கள், (திருக்குறளில் உள்ளபடி) ஏரிகள், குளங்கள் முதலிய சிற்பக்கலைகளை அமைத்துள்ளார்கள். ஒரு செயலை இன் னபடி ஆரம்பித்து இப்படி முடிக்கவேண்டும் என்ற கற்பனையறி வுடன் செயலாற்றுவதெல்லாம் சிற்பக்கலையே தானாகும். சிற்பத் தொழிலையியற்ற, கல்லுகளை உடைக்க வெடிகள் பல்லாண்டு, கட்கு முன்பே கண்டுள்ளனர், அதற்கு ரவைகள் குழாய் முறை களும் அன்றே கண்டனர். அன்றைக்குக் கல்லுகளை மலைகளைப் பிழக்க உபயோகித்த மருந்துகளை, தந்திரமாக மக்களைப் பிழக்க உபயோகிப்பதேதான் இன்றைய போர் விஞ்ஞானமாகும். நம் நாட்டு அன்றையப் போரில் கூட அத்திரம் பல விட்டதாகத் தெரிகி றது. மேகாத்திரம் (புகையம்பு) வருணாத்திரம் (நீரம்பு அல்லது சீதள அம்பு) அக்கினிபாத்திரம் (நெருப்பம்பு) சங்காரத்திரம் (அணு குண்டுமாதிரி அழித்தலம்பு) இப்படியாக புராதன நூல்களில் ஆய்ந் தால் தெரிகிறது ஆனால் நம் நாட்டு அறிவுப் பிறரைக் காப்பதற்கு எண்ணுமே தவிர பிறரை அழிப்பதற்காகவோ கெடுப்பதற்காகவோ நினைப்பதும் அதற்காகக் கருவிகள் தயாரிப்பதும் ஓர் செயலாக நாம் நம்புவது கிடையாது.

அப்படி நினைத்து பிறர் மகிழ்க வாழக்கருதி புகழுக்காக ஆசைப் பட்டு அறிவை செலுத்தினால் உலகமே பாடம் கேட்கும் முறையில்

எல்லாக் கலைகளும் புதிது புதிதாக வளர ஆரம்பித்துவிடும். இப்படி யாக உள்ள நம் பண்டைய இயற்கையறிவையடைந்து மக்கள் வாழ்க்கைக்கான எல்லாப் பொருள்களின் சிற்பக்கலைகளை வளர்ப் பதே சுதந்திரம், விடுதலை, சுயராஜ்யம் ஆகும். அவ்வந்நாட்டு இயற் கைக்குத்தக்க உணவுகள், மொழிகள், கலைகள் அவரவர்களுக்குத் தக்கவாறு அமைத்து அக்கலைகள் அழியாதவாது அரசாங்கமே பாது காத்துவருவதே நம் நாட்டு பல துறைச்சிற்பிகளும் உயர்ந்த இயற்கைச் சக்திகளை அறியத்தக்கவாறு செய்யும் ஆட்சி; என்ற நிலைகளை அறிவுடைமையோடு படிக்கவேண்டும்,

நம் நாட்டு வீரச் சிற்பிகளின் அறிவை வளரவிடாதபடி தடைப் படுத்தி, முட்டுக்கட்டையாக நிலத்துள்ள, வீண்வம்பு, மதச்சச்சரவு, சாதிப் பிணக்கு, அறியாமைச் சடங்கு, வறுமைநோய் இவைகளை அரசாங்கமே தடுத்துத் தொழிற்சிற்பிகளை விடுதலைச்செய்து வீரிட்ட சுதந்திரமுடன் செயலாற்றும் முறையில் இக்கலைகளைப் படிக்க வேண்டும். (மொழிச்சிற்பி வரலாறுமுன் செய்யுட்கலையில் வந்துள்ளது).

---

# சிலம்பக்கலை.

---

மறமான மாண்ட வழிச்செலவு தேற்றம்
என நான்கே யாமம் படைக்கு

சிலம்பம் என்பது தற்பாதுகாப்புக்கான படைச்செயல்களில் ஒன்றாகும். இக்கலை நம் நாட்டுக்குப் பழமையானது. பண்டைய காலம் மக்களைச் சுற்றிலும் நிறைந்த வனங்களும் விலங்கினங்களும் நெருங்கி இருந்தபடியால் விலங்குகளிடம் தப்பி வாழ அன்றைய மக்கள் இச்சிலம்பவலிமையைப் பெற்று இருந்திருக்கிறார்கள்,

அவை மூன்று வகையாக இருந்திருக்கின்றன.

பக்குவமாகக் கொத்திவிட்ட செம்மண் நிலத்தில், ஒருவரோ டொருவர் மல்லுக்கட்டிப் புரண்டு, மண்ணின் சத்தோடு உடல்

வலிமையடைவது, அதில் ஒருவர் வலிமை மற்றவருக்கும் பங்களிக்கிறது, பிராணச் சக்தி கட்டுப்பட்டு உறுப்புகள் வலிமையடைகின்றன. நன்றாக செறிப்பதால் சதைப்பற்றுகள் உரமோடு வளர்ச்சியடைகின்றன, அதோடு தண்டால் பயிற்சி என்ற ஆசன முறைகளும் இத்துடன் சேர்ந்த உடற்பயிற்சிகளேயாகும். இதற்குமேல் மற்றொரு முறையும் உண்டு. பளுவான கட்டைகளால் செதுக்கப்பட்ட கரளா, இரும்பு குண்டு, கைப்பிடிக் கட்டை, சுழல்பார், பேரல்பார், ஊஞ்சல்பார், வளையல்பார், கட்டைப்பந்து, தோற்பந்து போன்ற கருவிகளைக்கொண்டு, ஓடி, தாண்டி, குதித்து, பாய்ந்து இப்படியாக உடற்பயிற்சியில் வலிமை பெறுவது. அதற்குமேல் இன்னொரு முறையும் உண்டு.

ஆறு அல்லது ஏழு அடி நீளமுள்ள நல்ல திடமான குச்சி ஒன்றைக் கையில்பிடித்து சுழற்றி சுழற்றிப் பழகுவது. முறையோடு சுழற்றப் பழகிக்கொண்டால் 16-மூலையில் 16-பேர்கள் நின்றுக் கொண்டு இடையில் உள்ள பயிற்சியாளன் ஒருவனை, பதினாறுபேரும் நெருங்கி அடிக்க முடியாதபடி சுழற்றிச் சுழற்றித் தூரத்த முடியும். சுற்றிலுமுள்ளவர்கள் கையிலுள்ள வேல்களை வீசி வீசி எறிந்தாலும் அவைகள் மேல் விழாதபடி சுழல் குச்சித்தடுத்துத் தடுத்துத் தூர எறிவதைக் காணும்போது பெரும் வியப்பைத்தரும்படி இருக்கும். அதேபோல் கத்தி சுழற்றல், சுருள் கத்தி சுழற்றல், ஒருவரை ஒருவர் குச்சி கொண்டு கத்திகொண்டு கையைக்கொண்டு போரிடும் காட்சி மிக வியப்பைத்தரும்.

பந்தம் கொளுத்தி, எரியும்போதே கோல்பந்தம், கயிற்றுப் பந்தம் முதலியவைகளை சுழற்றுவது எவ்வளவு பெரிய நெருக்கடியிலிருந்தும் தப்பிவர வெகு சுலபமானதாக இருக்கும். இப்பயிற்சிகளால் உடலின் நாடி நரம்புகள் இரத்தம் யாவும் நன்றாக சுத்தப்பட்டு, சுருசுருப்புடன் வளர்ந்து, நோய்க் கிருமிகள் வளராதபடி இன்பமாக உடல் காக்கப்படுகிறது. மயிர்க் கால்களில் வெயர்வை நீர் தாராளமாக வந்து உடலை சுத்தப்படுத்துகிறது.

இப்பயிற்சிகளில் எத்தனையோவித இலக்கணங்கள் உண்டு அவ்வவ்விலக்கண முறையறிந்து உடலிலுள்ள உறுப்புகளின் தன்மை

யறிந்து பயிற்சி புரிந்தால் உடலில் வரும் எல்லா வித நோய்களையும் தடுக்கலாம். எந்தப்பகுதியில் எந்த நோய் வந்தால் அதற்கு இன்ன ஆசனம் போட்டு இப்படிப் பயிற்சி புரிந்தால் தீரும் என முறைகள் உண்டு,

உடற்பயிற்சி; மனக்கவலையை அறவே மாற்றுகிறது உடலின் அசதி, சோர்வு, சோம்பல், பயம், பேடி, போலி, அடிமை, வறுமை முதலிய நோய்களை அண்டவிடாமல் துரத்துகிறது. பலம் நட்பு புகழ் துணிவு சொல்வன்மை, இன்பம், ஞானம் இவைகளை வளர்க்கிறது.

ஆனால் அந்நிலையில் உயர்வும் தாழ்வும் போட்டியிட்டு இழுக்கப் பார்க்கும்.

உயர்வான நண்பர்களின் சேர்க்கை கிடைத்து கல்வி கேள்வி அறிவு, நல்வழி, இல்வாழ்க்கை போன்ற வழியறிந்து தன்மானத்தைத் தன் வலிமையால் காத்து

> யான் எனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்கு
> உயர்ந்த உலகம் புகும்

என்றபடி வாழ்ந்தால், அந்நிலைமை படைத்த வல்லவன் பலராலும் புகழ இனிது வாழும் ஒப்பற்றவனாயிருந்து பலருக்குந்தீங்கு நேராதபடி காவல்புரியும் வேந்தனாக வாழ்வான். அப்படியின்றி தன் உடல் வலிமையடைந்து திமிர் ஏறியவுடன் யாரையும் மதியாமல் யாருக்கும் அடங்காமல் தீங்கு செய்வதே தனது செயலாகக்கொண்டு கெட்ட நண்பர்களைத் தனக்காளாக வைத்து, காமவெறிகொண்டு

> தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
> தன்னையே கொல்லும் சினம்

என்ற சட்டங்களை மதிக்காமல் தீங்குகளைச் செய்து

> பகைபாவ மச்சம் பழியென நான்கும்
> இகவாவாம் இல்லிறப்பான் கண்

என்ற குற்றங்களுக்கு ஆளாகி வீணாகக் கெட்டுவிடுவான்,

ஆதலால் இவ்வழிகளை வெகு எச்சரிக்கையாகப் பயன் படுத்த வேண்டும். (ஆற்றலைத்தளரவிடாத ஆத்மீக சக்தியுள்ள வேதாந்திகளுக்கும், உலக இயற்கைச் சக்தியை நுட்ப அறிவால் எட்டிப் பிடித்து உள்ளந்தோறும் நுழைக்குந் திறனமைந்த புலவர்களுக்கும், பலதிற மக்களிடத்தும் அஞ்சாது கலந்து ஆவன செய்து நாட்டை நடத்தும் அரசர்களுக்கும், சிலம்பப் பயிற்சியால் உடல் வன்மைப் பட்டு வீரக் கலையால் உள்ளத்தைத் திடப்படுத்தி இன்புடன் வாழும் வலிமையோர்க்கும் காமம் காலனாகும்)

ஒரு பெண்ணை மணந்து அளவோடு வாழ்க்கை நடத்தினால் அவரவரின் சக்திக்கு பங்கம் வராமல் வாழலாம். இல்லையேல் வீண் பெயரோடு மட்டிலும் பதராக இருக்கலாம்.

நிற்க உடற்பயிற்சிக்கு சிலம்ப விளையாட்டு வேண்டுமா? தொழிலால் படும் துன்பமே பயிற்சியாகாதா? என ஒரு சிலரின் கேள்வி. அதனால் முடியாது. தொழிலால் ஒரு சில நரம்பும் உறுப்பும் மட்டிலுமே வேலை செய்கிறது. அதனால் மற்ற உறுப்புகள் வலிமை குறைந்து எவ்வளவு தின்றாலும் வயிறு பெருத்தலைவிட வலிமையடைவதில்லை அதோடு உள்ளங்களி கூர்வதில்லை. உழைப்பு கானலை மூட்டி உடலை உருக்குகிறது. விளையாட்டு மகிழ்வை ஊட்டி உடலை வளர்க்கிறது. ஆதலால் ஆண் பெண் இருவரும் அவ்வவ்வுடலமைப்புக்குத் தக்கவாறு உடற்பயிற்சியை பழக்கிக் கொள்ளும் உணர்ச்சியுடன் படிக்கவேண்டும்.

---

# அரசியற் கலை.

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு

அரசியற் கலைகளைப் பல நூல்கள் பலவிதமாக எழுதுகின்றன. ஆயினும் பண்டைய அறிஞர்கள் கூற்று மிக அறிவுடைமை

யானதும் தெளிவானதுமாகும். இன்றைய நூற்கள் விளக்கும் கலைகளை விட பண்டைய அறிஞர்களின் பாடம் வலிமை பெற்றதும் அழியாததுமாயிருக்கிறது.

பழைய திராவிட பால சிட்சை அதாவது அரிச்சுவடி என்ற முதற் புத்தகத்தைப் படிக்கும் குழந்தைகள் ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன் உலக நீதி முதலிய அறிவுப் பாடத்தையும் பாடம் செய்துக் கொள்வார்கள். அதேமாதிரி ஓர் அரசன் நான்கு வேதம் ஆறு சாத்திரம் 64 கலைஞானம் 96 தத்துவம் முதலிய வகைகளைத் தெரிந்திருக்கவேண்டும் என்று பழைய ஓலைச்சுவடி நூல்களில் நம் நாட்டு அறிஞர்கள் எழுதிவைத்துள்ளார்கள்.

அரசர் மட்டிலுமல்ல ஓர் நாட்டுத்தலைவர், ஓர் ஊர்த்தலைவர், ஓர் சமூகத்தலைவர், ஓர் சங்கத்தலைவர், யாவரும் அவைகளைத் தெரிந்திருக்கவேண்டும் என்பது திருவள்ளுவர் திட்டமாகும்.

வேதம் நான்கு; வேதம் என்பது நூல் என்றுதான் பொருள். வேதம் என்பதாகத்தனிப்பெயரால் ஓர் புத்தகம் கிடையாது. மக்கள் வாழ்க்கைக்கு வழிகளை வகுக்கும் முதல் நூல் வேதமாகும். (முதல் நூல்-மொழி பெயர்க்காதது சுதந்திரமாக எழுதும் நூல்)

அறம்பொருள் இன்பம் உயிரச்ச நான்கின்
திறந்தெரிந்துத் தேறப் படும்

நான்கு முறைகளுக்காகவே நான்கு வேதம்—நான்கு வழி, எனப் பெயர் வைத்துள்ளனர். அவ்வழிகள் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்காகும். இந்நான்கு வழிகளைஉணர்த்துவதே திருக்குறள் வேத நூல்களாகும்.

### ஆறு தொழில் நூல்.

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

ஆறு தொழில்-உழவு, கைத்தொழில் வரைவு, வாணிபம், கல்வி, சிற்பம் ஆகிய ஆறு தொழிலுக்கும் ஆறுவகை நூல்கள் உண்டு

என்றும், அதைத் தொழிலாளர்கள் கற்றிருப்பார்களென்றும், அரசன் பாதுகாக்காவிடில் அவர்கள் நூல்களை மறந்துவிடுவார்கள் என்பதால் அரசர் முதலியவர்களும் ஆறுவகைத் தொழில் நூல்களைக் கற்றும், கற்போரைப் பாதுகாத்துமிருக்கவேண்டும்.

## கலைஞானம் 64

எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், செய்யுளிலக்கணம், அணியிலக்கணம், பொருளிலக்கணம், கணக்கு முறை, எழுதும் முறை, சரித்திரம், ஒழுக்க நூல், வான நூல், நில நூல், அற நூல் குறிப்பு நூல், தவ நூல், சிற்ப நூல், மருத்துவ நூல், உருவ நூல், இசை நூல், யாழ், குழல், மத்தளம், தாளம், போர் முறை, மற்போற் முறை, பொன் சோதனை, இரத சோதனை (வாகனம்), யானைச் சோதனை, குதிரைச் சோதனை, இரத்தினச்சோதனை, வசியச் சக்தி, தன்வயச்சக்தி, மயக்கச்சக்தி, ஆய்வுச்சக்தி, கூடுவிட்டு கூடு பாய்தல், வானமூர்தல், செயற்கரிய செயல், இல்லாதன செயல், திடுக்கிடச் செயல், நெருப்பை அடக்கல், நீரைக்கட்டல், காற்றை அடக்கல், நோக்கை அடக்கல், சொல்லடக்கல், விந்தடக்கல், காதடக்கல், போரடக்கல், எண்ணியவெண்ணியாங்கெய்தல், நடனம், நாடகம், போன்ற 64 கலைகளின் ஞானத்தையும் நன்கு பெற்றிருத்தல் வேண்டும்.

## தத்துவம் 96

பூதம்—5. மண், நீர், அனல், காற்று, விசும்பு,

பொறி—5. மெய், வாய், கண், மூக்கு, செவி.

புலன்—5. சுவை, ஒளி, உணர்வு, ஓசை, நாற்றம்.

தொழிலுறுப்பு—5. கை, கால், வாய், எருவழி, கருவழி.

குணம்—4. மனம், அறிவு, நினைவு, முனைப்பு.

உணர்வு நிகழ்ச்சி—7. காலம், பிறழா நிகழ்ச்சி, கலை, நினைப்பு, விருப்பு, மகன், மாயை.

உயர்வு நிலை—5. தூய நினைவு, தலைமை, அருள் நிலை, அன்னை, அத்தன்.

நாடி—10. இடது மூச்சு, வலது மூச்சு, நடு மூச்சு, உள்நாக்கு நரம்பு, வலக்கண் இடக்கண் நரம்பு, வலச்செவி இடச்செவி நரம்பு, கருவாய் எருவாய் நரம்பு.

வாயு—10. உயிர், மலம் தள்ளல், தொழில் நிகழ்த்தல், ஒலி நிரவுதல், தும்மல், விழி, கொட்டாவி, இமை, வீங்கற் காற்றுகள்.

குடல்கள்—5. இரைக்குடல், செரிகுடல், நீர் குடல், மலக் குடல், விந்துக்குடல்.

உடல்—5. சோற்றுடல், காற்றுடல், மன உடல், அறிவுடல், இன்ப உடல்.

நிலைகள்—6. மூலம், தொப்புழ், மேல் வயிறு, நெஞ்சம், மிடறு, புருவ நடு.

மண்டிலம்—3. தீமண்டிலம், சூரிய மண்டிலம், மதி மண்டிலம்

மலம்—3. ஆணவம், மாயை, வினை.

நோய்—3. வாதம், பித்தம், கோழை.

பற்று—3. பொருள், புதல்வர், உலகம்.

குணம்—3. அமைதி, எழுச்சி, தாழ்வு.

பகை—6. மருள், செருக்கு, உட்பகை, அவா, வெகுளி, பற்றுள்ளம்.

ஞான நிலை—5. நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம் உயிர்ப் படக்கம்.

தாது—7. சாரம், இரத்தம், ஊன், கொழுப்பு, எலும்பு, மூளை வெண்ணீர்.

தொழிலுறுப்புச் செயல்கள்—5. சொல்லல், நடத்தல், கொடுத்தல், விடுதல், மகிழ்தல்.

பேறு—8 நுண்மை, பருமை, விண் தன்மை, மென்மை, விரும்பிய தெய்தல், நிறைவுண்மை, ஆட்சியளுதல், கவர்ச்சி, முடிந்த முடிவு.

இப்படியாக உள்ள தத்துவம் 96-ன் கலைகளைக்கற்று அதன் நுட்பங்களை அறிந்தால் அப்போது இவ்வுலகப்பொருள்களை நீர்வகிக்

கும் ஆற்றல், தானே வளரும். அந்த நிர்வாகத்திற்குத்தான் அரசியற் கலை என்று பெயர்.

அக்கலையின் சக்தி சுதந்திர அறிவோடு, அடிமை நீங்கி, பரந்த நோக்கத்துடன் பிறர் இன்பமே தன் இன்பமாகக் கருதி செயலாற்றும் ஆற்றல், நிறைவு படும்.

கலையறிவின் ஆற்றலைப் பெருமல் கல்வி மாத்திரம் கற்பதனுல் நிறையாற்றலைப் பெற முடியாது. ஒருவரால் பரந்த பொதுச் சக்தியைப் பெற மாட்டாததால் நூல்களைக் குறை கூறவும் முடியாது. இப்படியாக உள்ள சக்திகளைப் பெற்ருேர்களைத்தான் வேந்தன் இறைவன் அரசன் என்றெல்லாம் கூறுவர்.

---

# அரசியல் திட்டங்கள்.

---

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனுள் பவர்க்கு

அரசர்கள் சோம்பலென்னும் அறியாமையிற் சிக்கி காலங் கடத்தாமல், நற்கல்விகளைக் கற்றவராயும், எதையும் துணிந்து செய்து மக்களைக் காக்கும் தன்மையாகிய இம்மூன்றும் அமைந்திருக்கவேண்டும்.

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. (குறள்)

வாழ்க்கை முறைகளுக்கு இடையூறு விளையாதபடிக் காத்தும், இடையூறு செய்யும் குற்றங்களை நீக்கியும், வீர ஆட்சியோடு தவறுதல்களுக்கு ஆளாகாத மானம் நிறைந்தவர்களின் ஆட்சியே அரசாங்கமாகும்.

இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு

அரசாங்கத்தில் காலத்திற்கேற்ப புதிய புதிய செயல்களை இயற்ற லும், மக்களிடம் ஓரளவு வரியை வாங்கலும், வாங்கியப் பொருள் களைக் காத்தலும், காத்துவந்த பொருள்களைக்கொண்டு தொழில் முறைகளை வகுத்தலும், அதனால் எவ்வித குறைபாடுகளும் தோன் ருதவாறு வல்லமையுடன் ஆட்சிபுரிவதே அரசாங்கமாகும்.

காட்சிக்கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம்

வேந்தனைக் காணவேண்டுமென்று முறையுடன் யார் வந்தாலும் அன்போடு இடந்தந்தும், அறியாமல் பேசினாலும் அதற்காகக்கடிந்து பேசி வெறுப்பை உண்டாக்காதபடி இன்சொல் பேசியும் உள்ள வேந்தனை இம்மாநிலத்தார் இறைவனென்று உயர்த்திக்கூறு வார்கள்.

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை
கவிகைக்கீழ்த் தங்கு முலகு [வேந்தன்

அறிவற்றவர்கள் சொல்லத்தெரியாமல் கூறும் கடுஞ்சொற்களையும் கேட்டு, அதற்காக வருத்தப்படாமல் அவர்களின் வருத்தத்தைத் தெரிந்து அதற்கான செயல் செய்து நாட்டை ஆளும் வேந்தனின் குடையின் கீழ் மக்கள் சூழ்ந்து வாழ்வார்கள்.

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்

தம்மை நாடி வந்தவர்களையெல்லாம் பொது நோக்காகப் பார்த்து, அவரவர்களின் எண்ணம் செயல்களை வரிசையாகத்தெரிந்து தேவை களைச்செய்து வந்தால், அச்சிறப்பையறிந்து மக்கள் ஒத்துவாழ்வார் கள்.

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந்து எண்ணிக் கொளல்

காரணமின்றி தன்னிடத்திலிருந்துப் பிரிந்து போயினர், தக்கக் காரணத்துடன் தன்னிடம் வந்து சேர்ந்தால், பழைய பகையை எண்ணத்தில் வைக்காமல் உடனே சேர்த்துக்கொண்டு அவர் கருதியதைச் செய்துக் கொடுத்து காப்பது வேந்தன் கடமையாகும்

சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்

மன்னவனைச் சூழ்ந்துள்ள பெரியோர்களையே மக்கள் நாடி இருப்பதால், அப்பெரியோர்களையே தமது கண்ணாகக்கொண்டு அவர்களால் நாட்டு மக்களைப் பார்த்து ஆவனச்செய்து பெரியோர்களின் துணையால் ஆட்சியை நடத்துவாராக.

இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்

மன்னனின் உள்ளத்தே எழும் எண்ணங்களை தடுத்துக் கூறும் அறிஞர்கள் தன்னிடத்தே இல்லையானல் அம்மன்னன் பிறர் கெடுக்காமலேயே தானே கெட்டுவிடுவான்.

அமைச்சர்களின் செயல் விளக்கம்

கருவியுங் காலமும் செய்கையும் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு

அரசாங்கத்திற்குத் தேவைப்பட்ட போர்க்கருவிகள், பொருட் கருவிகள், துணைக் கருவிகள் முதலான கருவிகளையும், எவ்வெக்காலத்தில் எவ்வெச்செயல் புரியவேண்டுமென்பதனை ஆய்ந்தும், செய்யவேண்டியனவற்றை காலமறிந்து செய்தும், இவ்வளவையும் திறமையுடன் செய்து முடிக்கும் திறமையும் அமைந்தவர்களே அமைச்சர்கள் ஆவார்கள்.

பிரித்தலும் பேணிக்கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு

ஆட்சியின் நீதிக்கு ஒத்துவராதாரை வேறு பிரித்தலும், மக்களிடம் இரக்கமொடு ஒத்துவாழ்வாரைச் சேர்த்துக் கொள்ளலும், பிரிந்து வாழ்பவரின் மனம் ஒத்துவரின் பொருந்திக்கொள்ளவும் வல்லமையுடையதே அமைச்சு எனப்படும்.

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு

நல்லவை தீயவைகளை குறிப்பால் தெரிந்துக்கொள்ளலும், பல செயல்கள் ஒரே காலத்தில் தோன்றினாலும் அதில் நீதி இன்னது என தேர்ந்தெடுப்பதும், பல கேள்விகள் ஒருங்குவரினும் அவைகளில் இதுதான் சரி என்று ஒருதலைப்பட்டுத் துணிந்து கூறவும் வல்லமை படைத்ததே அமைச்சு ஆகும்.

அறிகொன் றறியா னெனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்

அரசரிடம் ஒரு நல்ல முறையைக் கூறினால் அத்திட்டம் அரசருக்கு விளங்காமல் பல வழிப்பேசும்போது பக்கத்துள்ள மந்திரிகள்தான் அதை விளக்கிக்காட்டி இருவருக்கும் நடு நிலையை, சொல்லாமற் சொல்லிக்காட்டும் திறமை அமைச்சரிடம் அமைந்திருக்கவேண்டும்.

அமைச்சராகாதவர்

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோர்
எழுபது கோடி யுறும்

அரசனிடத்தில் முகநகநட்போடு இருந்து, நெஞ்சத்தில் வஞ்சனை கொண்டு கூடவே இருக்கும் மந்திரியைவிட எதிர்த்து நின்று போராடும் பகைவர்கள் எழுபதுகோடி போனாலும் வெல்லலாம். உடனிருந்து சூழ்ச்சி செய்யும் அமைச்சர் முதலானோரை நம்பக்கூடாது என்பதாம்

முறைபடச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறம்பா டிலாஅ தவர்

ஒரு செயலைச் செய்வதற்கான எல்லா அமைப்புகளும் பொருந்தி யிருந்தும் அச்செயலைச் செய்ய முடியாமல் ஏமாந்து விடுந் தன்மை, அறிவற்ற மந்திரிகளிடம் உண்டு

இப்படியாக உள்ள அரசு அங்கம் என்ற முறைக்குச் சம்பந்தப் பட்ட படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறு அங்க மும், பிணியின்மை, செல்வம், விளைவு, இன்பம், ஏமம் ஆகிய ஐந்தணிகளும்

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணுமான நான்கு உறுப்புகளும்

நாட்டில் அமையப்பட்டு, உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையு மான மூன்று குற்றங்கள் நாட்டைச் சேராமலும், பல்குழுவும் பாழ்செய்யுமுட்பகையும் வேந்தலைக்குங் கொல்குறும்புமாகிய பிளவு கள் நாட்டில் இல்லாமலும், ஆட்சி நடைபெறுகிறதா என்று ஆரா யும் முறையில் அரசியல்களைப் படிக்கவேண்டும்.

---

# மெஞ்ஞானகலை.

---

இம்மெஞ்ஞானக்கலையானது முடிவான வீட்டிலக்கணமென் னும் பேரின்ப நிலையை விளக்குவதாகும்

தான் என்பதெது ? தனக்கு எதிரிட்ட உலகம் எது ? தான் என்பது எனது உடலையா ? இவ்வுடலை நடத்தும் ஒன்றையா ?

உடலும் எனக்கு வேராயின் நான் யார். எல்லாமாயும் எங்கு மாயும் நிறைந்த ஒன்றுதான் நான் என்றால் எனக்கு எதிரிட்ட உலகம் தெரிவானேன்

நான் நான் என்கிறேனே ஒழிய என்னையறிய முடியாமலிருப்பானேன் ?

அப்படியானால் நான் எங்கிருக்கிறேன். என்னை நான் உணர முடியாத படி இருப்பது போலத்தான அவரவர்களும் அவரவர்களைத் தெரியா மலிருப்பார்கள். அப்படி ஏன் இருக்கவேண்டும், நானே இல்லாம லிருக்கும்போது அவன் அவர்கள் அவைகள் மட்டிலும் எப்படி இருக்கமுடியும். என்னை நான் நோக்கும்போது இல்லாமலும் செயலில் நான் இருந்துகொண்டும் உள்ளபடித்தான் அனைவர்களும் இருக்கின்றனர் போலும். நீரில் குமிழிதோன்றுகின்றன, பின் நீர் வடிவாகவே மாறுகின்றன.

மண்ணிலிருந்து சட்டிபானை தோன்றுகின்றன, பின் மண் ணாகவே மாறுகின்றன.

இப்படியாக எல்லாமாயும் எங்குமாயும் நிறைந்த ஒரு பொரு ளின் தோற்றவடிவமே நான், நாம், என்பது. அத்தோற்றம் மறைந் தால் அது அதுவாகவே மாறுகின்றன. இதனிடையில் இன்பம் துன்பம் என்ற இரண்டில் இன்பமடைந்தநேரம் இன்பநேரமாயும் துன்பமடைந்த நேரம் துன்பம் அடைந்த நேரமாயும் ஆகிறது.

நில்லாதவற்றையெல்லாம் நிலையுள்ளதென எங்கி காலங்கழிப் பவர் சிலர். பொருளல்லவற்றைப் பொருளென்று கருதி நேரத்தைக் கழித்தவர் சிலர். யான் எனதென்னும் செருக்கால் எனக்கே எனக்கே என வீண் சுமையைச் சுமந்து அல்லலுருகின்றவர் சிலர்

இப்படியாக உள்ள உலகத்தில், தானே சொந்தமற்ற நிலையில், தனக்குச் சொந்தமான பொருள்களென்று கூறிக்கொண்டு பற்றுக் குறைக்கு இங்கும் அங்கும் சுற்றிப்பல எண்ணங்களைச் சுமந்து, பற்

றை வலிமைப்படுத்தி, அப்பற்று நம்மைப்பற்றி, நாம் அதைப்பற்றி, நீங்குமோ எனக் கவலைப்பட்டு, கவலை முதிர்ந்துத் துன்பமாக மாறி துன்பம் துக்கமாக வளர்ந்து, அழுகை முதலிய செயல் வடிவாகும் அளவுக்கு வளரவிடாதபடி அறிவுடன் கூடிய உடல் இன்பமுடன் வாழவும், இன்பம் வளர்ந்து பேரின்பமாகத் தழைத்து அப்பேரின்ப நிலையிலிருந்து மாறாமல் நிலைத்திருப்பதே மெஞ்ஞான கலையாகு மென்ற உண்மையை அறிந்துப் படிக்கவேண்டும்.

அப்பேரின்ப நிலையில் உள்ள அன்பு, வாய்மை, நட்பு என்ற நற் குணத்துடன் பழகி இன்பமடைவதற்கு உறுதுணையான ஆசையே காதலென்னும் இன்பமாகும். அவ்வின்பத்தை அழியாமல் காப் பதே அரசியலென்னும் பொருளியலாகும், அப்பொருள் வடிவமே இல்வாழ்க்கை யென்னும் அறவழியாகும். ஆதலால் அறம் பொருள் இன்பம் வீடு என்பதெல்லாம் பேரின்பத்தையடைவதற்கான வழி களேயாகும் என்ற உண்மையை அறியும்படிப் படிக்கவேண்டும். இதற்காகவே

அறிவுடையார் எல்லா முடையார் அறிவிலார்
என்னுடையரேனுமிலர் என்றும்

எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு

என்றும் திருவள்ளுவர் தம் திருக்குறளில் விளக்கி உள்ளார் ஆதலின் திருக்குறள்களிலுள்ள அறிவுகளை ஊன்றிப் படிக்க வேண்டும்.

மெஞ்ஞான கலையை நாட்டில் நிலைப்படுத்தும்போது உடலால் செய்யமுடியாத செயலை மெஞ்ஞானக்கலை நடத்திக்காட்டும்

அரியவென்றாகாத வில்லை பொச்சாவாக்
கருவியாற் போற்றிச்செயின்

எண்ணிய வெண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெரின்

உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின்

வேண்டிய வேண்டியாங்கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்

என்ற அரிய செயல்களை நடத்திக்காட்டும் நிலைகள் வளரும்

அறிவு, ஞானத்தைக்கொண்டே எல்லா வழிகளையும் எல்லா செயல்களையும் நடத்த முடியும்

எவ்வளவு உயர்ந்து விளங்கினாலும் அதில் பற்றுகொண்டு தனக்கென வாழாமல் மற்றவர்களையும் இன்புற்று வாழச்செய்விக்கும் முறையில் மெஞ்ஞானக் கலையைத் துறவித்துறவிப் படிக்க வேண்டும். படித்தபடியும் நடக்கவேண்டும்.



ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்-தீதற்றோர்
உள்ளுதோ றுள்ளுதோ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

---

லோபோ பிரபு பிரஸ், செவ்வாய்ப்பேட்டை, சேலம்.
Q. H. No. S. 49B C. 2000.

# நச்சு நோய்க்கு நல்ல மருந்து இங்கே கிடைக்கும்.

நோய் நாடி நோய்முதனுடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். (குறள்)

நம் நாடு, மலை காடு நெருங்கினதாகையால் பல ச்சு (விச) பூச்சிகளின் குணம் சிலர் உடலில் பரவி டுவது உண்டு. அது நாளுக்கு நாள் ரத்தத்தில் றி மேற்றேலின் பக்கமாகப் படரும் ஆரம்பம் விசத் ற்கத் தகுந்தவாறு சொறியாகத் தினவு கண்டோ, டித்தோ, சிவந்து, கருத்து, சொரசொரப்பு, வழ ழப்பு இம்மாதிரி ஆரம்பிக்கும்.

முதிர்ந்தால் மேகம் படைபோன்ற நோயாகும் இம்மாதிரி விச நோய்களுக்கு பல காலமாக வழக்கி ருந்து வந்த மருந்துகளைப்பதிப்பகம் தயாரித்து வைத் துள்ளது. விபரத்தை விளக்கமாகக்காலம், நிலை, வயது ல்லாம் தெளிவாக எழுதினுல் அதற்குத் தகுதியான ருந்தும் முறையும் குறைந்த விலையில் பெறலாம்.

சாதாரண பாம்பு, நாய், பூனே, எலி. நண்டுத் தருக்கால் போன்றவைகள் கடித்த உடனே கொடிக் ள்ளி மரப்பட்டை, வசம்பு, மஞ்சள், இவைகளை சம டை சேர்த்து நன்றாகஇடித்து கடிவாயில் கட்டிவிட் டால் விசம் படராது. நல்லபாம்பு போன்ற விரைந்த ச்சுக்கு நமது மருந்தை உடனே உண்ணவேண்டியது

விபரத்திற்கு எழுதவும்.

